KALKI
20.3.88
ரூ. 2.

# கல்கி

“நான் ஏன் அரசியலுக்கு வந்தேன்?”

—ஜானகி சிறப்புப் பேட்டி

கல்கி 17-4-88

தமிழ் புத்தாண்டுச்
சிறப்பிதழில்

சுஜாதா

எழுதும்



# இருள் வரும் நேரம்

தொடர்கதை ஆரம்பம்

# "நான் ஏன் அரசியலுக்கு வந்தேன்?"

## —ஜானகி சிறப்புப் பேட்டி





'...நாங்கள் கடைசி நிமிடம் வரை இ. காங்கிரஸ் ஆதரவை நம்பியிருந்ததைத் தவிர வேறு ஒரு பாவமும் செய்யவில்லை...'

கேள்வி: நீங்கள் அரசியலுக்கு வர வேண்டிய அவசியம் எப்படி ஏற்பட்டது?

திருமதி ஜானகி ராமச்சந்திரன்: அவருக்குப் (எம்.ஜி.ஆருக்கு) பிறகு கட்சி சிதறி விடக் கூடாது என்கிற காரணம்தான் — சிதறக் கூடிய சூழ்நிலை உருவான காரணம் தான் என்னை அரசியலுக்கு வர நிர்ப்பந்தப் படுத்தியது.

கேள்வி: உங்களின் அரசியல் பிரவேசம் உங்களது சொந்த முடிவுதானா, அல்லது...

ஜானகி: எனது சொந்த முடிவு அல்ல. கட்சியின் விசுவாசிகளான பலரும் என் தலைமைதான் கட்சியின் சிதறலைக் காப்பாற்றும் — அவர் (எம்.ஜி.ஆர்) லட்சியங்களை நிறைவேற்றப் பாடுபடும் என்று என்னிடம் வற்புறுத்தினார்கள். அதுதான் என்னைத் தூண்டியது.

கேள்வி: இப்படியொருநாள் அரசியலுக்குவரவேண்டியிருக்குமென்றுஎம்.ஜி.ஆர். உயிரோடு இருந்த காலத்தில் நீங்கள் எப்போதாவது நினைத்துப் பார்த்திருக்கிறீர்களா?

ஜானகி: அப்படியொரு நினைவு எனக்கு ஒருபோதும் ஏற்பட்டதில்லை.

கேள்வி: அரசியல் பற்றி உங்களிடம் எம்.ஜி.ஆர். கலந்து பேசியிருக்கிறாரா? அவருக்கு நீங்கள் ஆலோசனை ஏதும் கூறி அவர் ஏற்றுக் கொண்டிருக்கிறாரா?

ஜானகி: அவர் என்னிடம் கலந்து பேசாத அரசியல் விஷயங்களே இல்லை. பல சமயங்களில் என்னுடைய கருத்துக்களை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

கேள்வி: எம்.ஜி.ஆர். காலமான அன்று தோட்டத்தில் நடந்தது என்ன? அவர் காலமானவுடன் கட்டை விரல் ரேகைகளையெல்லாம் நீங்கள் உங்களுக்குச் சாதகமாகப் பதித்துக் கொண்டீர்கள் என்று சொல்கிறார்களே?

ஜானகி: அன்று இரவு அடுத்த நாள் நிகழப் போகும் மருத்துவப் பல்கலைக் கழகத் திறப்பு விழா பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தோம். படுக்கப் போகும் போது பசிக்கிறது என்றார். வழக்கமாக இரவில் எப்போதும் தயாராயிருக்கும் பார்லி கஞ்சி கொடுத்தோம். குடித்துவிட்டுப் படுக்கையைச் சரிப்படுத்திக் கொண்டு (வழக்கமாக அவரேதான் படுக்கையைச் சரிப்படுத்திக் கொள்வாராம். மற்றவர்கள் செய்தால் அவருக்குப் பிடிக்காதாம்.) படுத்தார். அப்போதுதான் அவர் ஒருமாதிரியான நெஞ்சு வலியை உணர்ந்தார். பிறகு நடந்ததுதான் அனைவருக்கும் தெரியுமே... சிகிச்சை பயனளிக்கவில்லை. அவர் மறைவை என்னால் தாங்கிக் கொள்வது சிரமம் என்பதால் டாக்டர்கள் எனக்கு மயக்க மருந்து கொடுத்துப் படுக்க வைத்து விட்டார்கள். பிறகு நடந்தவையெல்லாம் எனக்குச் சரியாகவே தெரியாது. இந்நிலையில் எப்படித்தான் நா கூசாமல் அப்படிச் சொல்கிறார்களோ, தெரியவில்லை.



‘அவருடைய (எம். ஜி. ஆருடைய) அரசு துரோகத்தால் கவிழ்ந்துபோகக் கூடாது என்பதற்காகத் தான் நாங்கள் தி.மு.க. வின் ஆதரவை நாடினோம்...’

கேள்வி: எம்.ஜி.ஆரின் இறுதி ஊர்வலத்திற்காக அவருடைய உடல் வைக்கப் பட்டிருந்த பீரங்கி வண்டியில் ஜெயலலிதா ஏறியது தவறுதான். எனினும் ஒரு தவறை இன்னொரு தவறு மூலமா சரிப்படுத்துவது? அது பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

ஜானகி: அப்படி நடந்தது துரதிருஷ்டவசமானதென்றுதான் கருதுகிறேன்.

கேள்வி: கருணாநிதி சிலை உடைக்கப் பட்டது குறித்து நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

ஜானகி: வருந்தப்பட வேண்டிய நிகழ்ச்சி. மீண்டும் கலைஞர் சிலையை நிறுவ அ.தி.மு.க. உதவும் என்றும் அறிவித்தோம். கலைஞர் தான் மறுத்துவிட்டாரே, என்ன செய்வது?

கேள்வி: நீங்கள் தொண்ணூற்றேழு எம்.எல். ஏ.க்கள் ஆதரவுடன் முதலமைச்சராகப் பதவி ஏற்றுக் கொண்ட போது, சட்ட சபையில் உங்கள் மெஜாரிட்டியை நிரூபிக்க இ.காங்கிரஸைத்தான் மலையாக நம்பியிருந்

தீர்களா?

ஜானகி: ஆமாம். இ.காங்கிரஸுடன் அவருக்கு (எம்.ஜி.ஆர்.) இருந்த நெருக்கமான உறவில் விரிசல் ஏற்படுமென்று நான் கனவிலும் நினைக்கவில்லை.

கேள்வி: பிரதமர் ராஜீவை நீங்கள் சந்தித்த போது அவர் உங்களிடம் சொன்னது என்ன?

ஜானகி: 'இன்னும் இரண்டாண்டுகளுக்கு உங்கள் தலைமையிலான அமைச்சரவையே தொடரட்டும். நாங்கள் அதற்கு முழு ஆதரவும் தருகிறோம்; கவலைப்படாதீர்கள்' என்றார்.

கேள்வி: இருப்பினும் கூட — அ.தி.மு.க. வின் எதிரணியிலுள்ள பண்ருட்டி ராமச்



> ...முழு ஆதரவும் தரப்படுமென்று சொன்னது யாரோ அல்ல; இந்தத் தேசத்தின் பிரதமர். ஒரு பிரதமரின் உறுதிமொழியை எப்படிச் சந்தேகிக்க முடியும்...?

சந்திரன், ஜெயலலிதா போன்றவர்களுக்கு இ.காங்கிரஸுடன் ஒரு நெருக்கம் உண்டு என்னும் நிலையில் — அவர்களின் அந்த நெருக்கம் உங்கள் தலைமைக்கான இ.காங்கிரஸ் ஆதரவைப் பாதிக்கவும் வாய்ப்பிருக்கிறது என்னும் கோணத்தில் நீங்கள் சிந்திக்கவே இல்லையா?

ஜானகி: அப்படியொரு சிந்தனையே எனக்கு வரவில்லை. காரணம், என்னிடம் முழு ஆதரவும் தரப்படுமென்று சொன்னது யாரோ அல்ல; இந்தத் தேசத்தின் பிரதமர். ஒரு பிரதமரின் உறுதி மொழியை எப்படி சந்தேகிக்க முடியும்? முழுமையாக நம்பினேன். இன்னும் சொல்லப் போனால் சட்டசபை கூடிய அன்று காலை கூட நான் காங்கிரஸைத்தான் நம்பினேன்.

கேள்வி: இத்தனை நம்பிக்கையோடு இருந்த உங்களை அவர்கள் கடைசி நேரத்தில் காலை வாரிவிட வேண்டிய அவசியம் என்ன?

ஜானகி: நீங்கள் இதை அவர்களிடம் தான் கேட்க வேண்டும். எனக்கு என்ன தெரியும்?

கேள்வி: உங்களைக் கடைசி நேரத்தில் அவர்கள் ஆதரிக்காமல் போனதற்குக் காரணம், நீங்கள் அவர்கள் கட்சி எம்.எல்.ஏ.க்கள் சிலரை விலைக்கு வாங்க முயற்சி செய்ததுதான் என்று சொல்லியிருக்கிறார்களே?

ஜானகி: பிரதமரே தங்கள் கட்சியின் முழு ஆதரவும் உண்டு என்று சொன்ன பிறகு யாராவது சில எம்.எல்.ஏ.க்களை மட்டும் தங்கள் பக்கம் இழுக்க முயற்சி செய்வார்களா? நீங்களே யோசித்துப் பாருங்கள்...

கேள்வி: ஒரு கோணத்தில் பார்த்தால் அவர்கள் சொல்வதும் சரிதானோ என்று சந்தேகப்பட வைக்கிறது. அதாவது, சட்டசபை கூடுவதற்கு முன்பு இ. காங்கிரஸைச் சேர்ந்த ஐந்து எம்.எல்.ஏ.க்கள் தங்கள் கட்சிக் கட்டளையை மீறி உங்களுக்கு ஆதரவாகத் தங்கள் பதவியை ராஜினாமாச் செய்வதாக அறிவிப்பானேன்?

ஜானகி: இ.காங்கிரஸ் கட்சிக்குள் இருக்கும் பூசல்கள் — கருத்து மாறுபாடுகள் பற்றி

அனைவருக்குமே தெரியும். இந்நிலையில் அவர்கள் ராஜினாமா செய்ததென்பது கட்சியில் அவர்களுக்கேற்பட்ட அதிருப்திதான் காரணமே தவிர, எங்களுக்காக அல்ல. நாங்கள் கடைசி நிமிடம் வரை இ.காங்கிரஸ் ஆதரவை நம்பியிருந்ததைத் தவிர வேறு ஒரு பாவமும் செய்யவில்லை.

கேள்வி: இ. காங்கிரஸ் உங்களை ஆதரிக்காமல் போனதால்தான் இப்போது அதை எதிர்க்கிறீர்கள், இல்லையா?

ஜானகி: ஆமாம். மலையாக நம்பிக்கையைக் கொடுத்துவிட்டு இப்படிச் செய்தால் எப்படி ஆதரிக்க முடியும்?

கேள்வி: அப்படியானால், இனி இலங்கை அரசோடு இந்திய அரசு செய்து கொண்ட ஒப்பந்தம் பற்றி உங்கள் கருத்து என்ன?

ஜானகி: அதில் எங்களுக்கு எந்தவித மாற்றமும் இல்லை. ஒப்பந்தத்தை நாங்கள் முழுமையாக ஆதரிக்கிறோம். ஆனால் அதற்காக அங்கு தமிழர்கள் தங்கள் உயிர்களை இழக்கும்போது, அதை நாங்கள் எதிர்க்காமல் இருக்க முடியாது. அவர் (எம்.ஜி.ஆர்) இருந்த போதும் ஒப்பந்தத்தைத்தான் ஆதரித்தாரே தவிர, தமிழர்களின் உயிர்ப் பலிகளை அல்ல.

கேள்வி: எந்தத் தி.மு.க.வின் செயல்பாடுகள் பிடிக்காமல் போய், எம்.ஜி.ஆர். அ.தி.மு.க.வைத் தொடங்கினாரோ, அந்தத் தி.மு.க.வின் ஆதரவை நீங்கள் சட்டசபையில் கோரியது எம்.ஜி.ஆருக்கே எதிரானதாக ஆகாதா?

ஜானகி: படகு கரை சேர்ந்து விடும் என்று முழு நம்பிக்கையோடு பயணம் செய்து கொண்டிருக்கும் நிலையில் திடீரென்று படகைக் கவிழ்த்து விடுகிறார்கள். நாம் ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்படும் நிலையில் எதிரில் இருப்பது எதுவாக இருந்தாலும் பிடித்துக் கொண்டு கரையேறவே முயற்சி செய்வோம். அப்போது எதிரில் இருப்பவர் எதிரியா, நண்பரா என்ற பேச்சுக்கே இடமில்லை. அந்நிலையில்தான் நாங்கள் தி.மு.க. வின் ஆதரவை நாடினோம். அதுவும் அவருடைய (எம்.ஜி. ஆர்.) அரசு துரோகத்தால் கவிழ்ந்து போகக் கூடாது என்பதற்காகத்தான் நாடினோம்.

கேள்வி: சட்டசபையில் உங்களுக்கு மெஜாரிட்டியை நிரூபிக்க முடியாததோர் சூழ்நிலையில், நீங்களே முன் வந்து ராஜினாமாச் செய்திருந்தால் இன்னும் நாகரிகமாக இருந்திருக்கும் இல்லையா?

ஜானகி: உண்மைதான்; நானே முன் வந்து ராஜினாமாச் செய்திருக்கலாம் தான். என்ன காரணத்தாலோ அப்போது அது எனக்குத் தோன்றாமல் போய் விட்டது.

கேள்வி: சென்ற ஜனவரி— 28 சட்டசபை நிகழ்ச்சி என்பது மிகவும் அசிங்கமானதாகத்தான் போய் விட்டது. அந்த அசிங்கத்திற்கு யார் முதல் காரணமாக இருந்தாலும் அது நீங்கள் முதல்வராக இருந்த போதுதான் நடந்தது. அந்த வகையில் நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

ஜானகி: உண்மையிலேயே அன்றைய வேண்டாத நிகழ்ச்சிகளால் எனக்கு மிகவும் வருத்தம்தான்.

கேள்வி: அ.தி.மு.க.வின் இரண்டு கோஷ்டிகளால்தான் அரசியல் மேடைப் பேச்சு என்பது இப்போது ரொம்பவும் தரம் தாழ்ந்து போய் விட்டது...

ஜானகி: இன்றைக்குக் கூடப் பாருங்கள் 'ராமாவரம் தோட்டத்தை, நான் ஜானகியிடமிருந்து மீட்பேன்' என்று அந்த அம்மாள் (ஜெயலலிதா) பேசியிருக்கிறார். எந்த அர்த்தத்தில் அவர் இப்படிப் பேசியிருக்கிறார்— எந்த நோக்கத்தில் பேசியிருக்கிறார் என்று எனக்குப் புரியவில்லை. இது போன்ற பேச்சுக்களால் சிலர் மனம் கொதித்துக் கடுமையாகப் பதில் பேசுகிறார்கள் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால், உடனடியாக அவர்களை அழைத்து அப்படியெல்லாம் மற்றவர்களைப் போல் தரம் தாழ்ந்து போய்ப் பதில் சொல்லாதீர்கள் என்று கண்டிக்கிறேன். தரமிழந்த அரசியல் பேச்சுக்களில் எனக்கு நிச்சயமாக உடன்பாடில்லை.

கேள்வி: அ.தி.மு.க.வில் அமைச்சராக இருந்தவர்கள் கோடி கோடியாக லஞ்சம் வாங்கினார்கள் என்று மற்ற கட்சிக்காரர்கள் குற்றம் சாட்டவில்லை. இப்போது உங்கள் கோஷ்டிகளுக்குள்ளேயேதான் குற்றம் சாட்டிக் கொள்கிறீர்கள். அப்படியானால் அது உண்மைதானா?

ஜானகி: அவருடைய (எம்.ஜி.ஆர்) தலைமையின் கீழ் இருந்த அமைச்சரவையும் அமைச்சர்களும் எப்படிச் செயல்பட்டனர் என்பது மக்களுக்கு நன்றாகவே தெரியும். நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது?

கேள்வி: எம்.ஜி.ஆர். கட்சிக்குள் யாரைத் தமக்கு நெருக்கமாக — நம்பிக்கைக்குரியவராக வைத்துக் கொண்டிருந்தார்?

ஜானகி: கட்சியைப் பொறுத்த வரை; அவருக்கு (எம்.ஜி.ஆர்.) அனைவரும் ஒன்றுதான். தவறு செய்தால் யாராக இருந்தாலும் கண்டிப்பார்; முதல்நாள் பேசாமலே இருப்பார்; மறுநாள் அவராகவே அவர்களை அழைத்துப் பேசுவார். ஒருபோதும் அவர் யாரையும் கட்சிக்குள் தாழ்த்தி வைத்ததேயில்லை. அவருக்கு அனைவரும் ஒன்றுதான்.

கேள்வி: ஆர்.எம்.வீ.யை எம்.ஜி.ஆர். ஒரு வேலைக்காரனாகத்தான் நடத்தினார் என்று எதிரணியினர் சொல்கிறார்களே?

ஜானகி: அந்தப் பேச்சு ரொம்பவும் அநாகரிகமான பேச்சு. ஆர். எம். வீ. அவரிடம் சம்பளம் வாங்கிய போதுகூட ஒரு மானேஜர் என்ற உயர்ந்த அந்தஸ்தில் தான் வாங்கினார் என்பது அனைவருக்குமே தெரியும். எனவே, இதுபோன்ற அநாகரிகமான பேச்சுகளை நாம் கண்டு கொள்ளத்

தேவையில்லை.

கேள்வி: ஆர்.எம்.வீ. தான் உங்களை இயக்கிக் கொண்டிருப்பதாகச் சொல்லப் படுகிறதே?

ஜானகி: அது உண்மையானால் நான் டெல்லி சென்று பிரதமரைச் சந்தித்த போது ஆர்.எம்.வீ.யைத்தானே அழைத்துச் சென்றிருக்க வேண்டும். அப்படியில்லையே, நான்தானே சென்றேன்!

கேள்வி: நீங்கள் முதல்வராக இருந்த போது, சில சுயநிதிக் கல்வி நிறுவனங்களுக்கும், மதுக்கடைகளுக்கும் வழங்கப் பட்ட அனுமதி குறித்து இப்போதைய ஜனாதிபதி ஆட்சியில் மறு பரிசீலனை செய்வதாகச் சொல்லப்படுகிறதே?

ஜானகி: உண்மையில் நான் இன்னும் இரண்டாண்டுகளுக்கு முதல்வராக நீடிப்பேன் என்று பிரதமர் கொடுத்த நம்பிக்கையின் பேரில்தான் நான் அந்தக் கோப்புகளில் கையெழுத்திட்டேன். நிலைமை இப்படி ஆகும் என்று தெரிந்திருந்தால் நான் அவற்றில் கையெழுத்திட்டிருக்கவே மாட்டேன்.

கேள்வி: வரப்போகும் பொதுத் தேர்தலில் உங்கள் அணி எந்தெந்தக் கட்சிகளோடு கூட்டணி அமைத்துக் கொள்ளும்?

ஜானகி: இந்த நிமிடம் வரை நாங்கள் யாரோடும் கூட்டணி அமைப்பதாக நினைக்கவில்லை.

கேள்வி: ஆக, அடுத்த நிமிடம் மாறலாமா?

ஜானகி: அரசியல் சூழ்நிலைகளைப் பொறுத்தது அது. எனினும் தனித்துப் போட்டியிடுவதையே விரும்புகிறோம்.

கேள்வி: வரப்போகும் தேர்தல் பிரசாரத்தில் உங்கள் அணி இ.காங்கிரஸைக் கடுமையாக எதிர்க்குமா? அது எம்.ஜி.ஆர். வைத்திருந்த சுமுகமான உறவுக்கு எதிரானதாகாதா?

ஜானகி: சுமுகமான உறவைப் பங்கப் படுத்தியது நாங்கள் அல்ல.

கேள்வி: எந்தெந்தக் கட்சிக்கு மக்களின் செல்வாக்கு எப்படியெப்படி இருக்கிறதென்பது பற்றித் தாம்பரம் கிறிஸ்துவக் கல்லூரி மாணவர்கள் எடுத்த புள்ளி விவரப்படி உங்கள் அணி நான்காவது இடத்தில்தான் இருக்கிறது...

ஜானகி: தேர்தலில் மக்கள் எடுக்கும் முடிவுதான் சரியான முடிவாக இருக்கும் என்பதே எனது கருத்து. அதற்குத் தலை வணங்குவோம்.

கேள்வி: நீங்கள் எங்கே போட்டியிட்டாலும் உங்களை எதிர்த்து ஜெயலலிதா போட்டியிடப் போவதாக அறிவித்துள்ளாரே?

கேள்வி: நான் தேர்தலில் போட்டியிடப் போகிறேன் என்பதில் அந்த அம்மாள் எப்படி அத்தனை நம்பிக்கையோடு இருக்கிறார் என்பதுதான் புரியவில்லை.

கேள்வி: அப்படியானால் நீங்கள் போட்டியிடப் போவதில்லையா?

ஜானகி: பொறுத்திருந்து பாருங்கள்.

கேள்வி: எதிரணியிலிருக்கும் நெடுஞ்செழியனை மட்டும் உங்கள் அணிக்காரர்கள் இந்தப் பக்கம் வரவேண்டுமென்று அடிக்கடி குறிப்பிடுகிறார்களே, அதற்கு என்ன காரணம்?

ஜானகி: நாவலர் மட்டுமல்ல; அனைவருமே இங்கு வரவேண்டுமென்பதுதான் எங்கள் ஆசை.

கேள்வி: ஜெயலலிதா கூடவா?

ஜானகி: அந்த அம்மாள் மட்டுமென்ன விதிவிலக்கு? அவர் (எம்.ஜி.ஆர்) வளர்த்த கட்சி சிதறிப் போகக் கூடாது என்பதற்காகத்தான் நான் அரசியலுக்கே வந்திருக்கிறேனே தவிர, பதவி ஆசை கொண்டு அல்ல. இந்நிலையில் அந்த அம்மாளை மட்டும் எப்படி ஒதுக்க முடியும்? அவரும் வந்து ஒன்றாக இணைவதையே விரும்புகிறேன்.

பேட்டி: இளங்கோவன்

அட்டை வண்ணப்படமும், படங்களும்: கே. வி. ஆனந்த்



அடுத்த இதழில்...

# தேர்தல் தகிடுதத்தங்கள்..

—கவர் ஸ்டோரி

# என் தாத்தா – இந்த வயதிலும் என்ன துடிப்பு!

தாத்தாவுக்கு வயதாகிக் கொண்டே போகிறது. உடம்போட செயலாற்றல் குறைந்து கொண்டே வருகிறது. அவர் இப்போது குறைவாகச் சாப்பிடுகிறார்.

**அவர் தனது ஊட்டச்சத்துக்களை காம்ப்ளான் மூலம் நிறைவு செய்கிறார்.**

எளிதாக ஜீரணிக்கக் கூடிய காம்ப்ளான், உங்கள் உடலுக்குத் தேவையான 23 ஊட்டச்சத்துணவுகளைக் கொண்டதாகும். தேய்ந்த உடல் திசுக்களைப் புதுப்பிப்பதற்கான பால் புரதம், சக்தி பெறுவதற்கான கார்போ-ஹைட்ரேட்டுகள் மற்றும் கொழுப்புச்சத்து, உடல் நலத்திற்கான வைட்டமின் மற்றும் தாதுக்கள் ஆகியவற்றை கொண்டதாகும் காம்ப்ளான்.




**23**

மூலாதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்க்கத் தேவையில்லை.

## காம்ப்ளான்®

திட்டமிட்ட பரிபூரண உணவு

GX/47/213/TML

பம்பாய் நியூஸ்:

'ஏண்டாப்பா, பாழாய்ப் போன அரசியலில் அடியெடுத்துவைத்தோம்' என்று சென்ற வாரம் அமிதாப் அலுத்துக் கொண்டிருந்தால் வியப்பதற்கில்லை! அரசியலில் அவருக்கு ஏற்பட்ட எதிர்ப்பு அவர் சினிமாவை யும் பாதிக்க ஆரம்பித்து விட்டது! பம்பாயில் அவருடைய சமீபத்திய படம்



• அமிதாப்:



• தாக்ரே: பேச்சுடன் நின்றால் சரி.

# அமிதாப் சினிமா அரசியலாகிறது!

ஷாஹென்ஷா படாத பாடு படுகிறது!

ரிலீஸ் தேதிக்குப் பல தினங்கள் முன்னதாகவே அமிதாப்பின் பழைய படங்களைத் திரையிட்டு அமிதாப் மோகம் வளர முதலில் வழி செய்யப்பட்டது. ஆயினும் அரசியல் வாதிகளை இது ஏமாறச் செய்யவில்லை. தாணுவில் 'ராஷ்டிரிய சங்கர்ஷ் மோர்ச்சா' எனும் அமைப்பு இப்படம் திரையிடப்படும் தியேட்டர்களில் ஆர்ப்பாட்டம் நடக்கும் என்று அறிவிக்க, இரு தியேட்டர்கள் இப்படத்தைத் திரையிடுவதில்லை என்று தீர்மானித்து விட்டன!

பம்பாயின் மையமான பகுதியில் உள்ள கேபிடல் சினிமா முன் அகில இந்திய ஃபார்வர்டு பிளாக் கட்சியினர் ரிலீஸ் தேதிக்கு முன்னரே அமிதாப் பச்சன் சகோதரர்களின் கொடும்பாவிகளைத் தொங்க விட்டனர்!

நகரில் பதினாறு தியேட்டர்களுக்குப் படு பாதுகாப்பு, பந்தோபஸ்து தரப்பட்டுள்ளது. ரிஸர்வ் போலீஸ் பயன்படுத்தப்படுகிறது. தியேட்டரில் ஸி. ஐ. டிக்கள் தினம்தினம் மூன்று காட்சிகள் பார்க்க வேண்டிய பரிதாப நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கின்றனர்!

இந்தக் கிளர்ச்சிக்கு மறுபுறமாகத் திரைப் படத்துக்குச் சிவசேனா தன் ஆதரவைத் தெரிவித்து விட்டது. முதல் காட்சியின் வசூல் முழுதும் சிவசேனைக்கு நன்கொடை என்று சாணக்கியமாக அறிவித்து விட்டதே காரணம்!

இதை அறிந்ததும் தாணாவில் முதலில் படத்தைத் திரையிடத் தயங்கிய இரு தியேட்டர்களும் பின்னர் 'திரையிடத் தயார்' என்று அறிவித்தன.

அமிதாப் எதிர்ப்பு அணியினர் சாமர்த்தியமாகப் பல தியேட்டர்களில் அட்வான்ஸ் புக்கிங் செய்து, டிக்கெட்களை மூட்டை கட்டி வைத்துக் கூட்டமில்லாமல் செய்துவிடப் பார்த்தனர். இதன் உடன் விளைவாகக் கள்ள மார்க்கெட் காரர்கள் 'கார்னர்' செய்த டிக்கெட்களுக்கு ஏகக் கிராக்கியாகிவிட்டது. ஒரு டிக்கெட் அறுபது முதல் நூறு ரூபாய் வரை விற்றது! கூட்டமில்லை என்ற மைனஸ் பாயிண்ட், பிளாக் மார்க்கெட் விலை உயர்வு என்ற பிளஸ் பாயிண்ட்டில் அடிபட்டுப் போயிற்று!

மறுவாரமே பிளாக் மார்க்கெட் படுத்து விட்டதென்றால் காரணம், அமிதாப் எதிர்ப்பு வளர்ந்து வியாபித்தது அல்ல; படத்திலே போதிய அளவு மசாலா தூவப் படாததால் 'டிஷ்யூம்' ஆதரவாளர்களுக்குப் பெருத்த ஏமாற்றம் ஏற்பட்டதுதான்!

மகாராஷ்ட்ராவில் பால் தாக்ரே தலைமையில் இயங்கும் சிவசேனாவும் பஞ்சாபில் சீக்கியத் தீவிரவாதிகளுக்கு எதிராக இயங்கி வரும் ஹிந்து சிவசேனாவும் சென்ற வாரம் பம்பாயில் ஒருங்கிணைந்தன.

ஹிந்துக்களின் பாதுகாப்பாளர்களாகத் தங்களைக் காட்டிக் கொள்ளும் இந்த இரு சாராரும் பஞ்சாபில் தீவிரவாதிகளின் அட்டூழியங்களை முறியடிக்கத்தான் இந்தப் புதிய ஏற்பாடு என்று முழங்கினர்.

தாக்ரேயைத் தலைவராக ஏற்றுக் கொண்ட இந்தப் புதிய இணைப்பு, தீவிரமாகச் செயல் படத் தீர்மானித்துள்ளது. தலைமைப் பதவியை ஏற்றுக் கொண்ட உடனேயே தாக்ரே வெளியிட்ட ஓர் அறிவிப்பு அனைவரையும் அதிர்ச்சியுறச் செய்திருக்கிறது. "அகில இந்திய அளவில் சீக்கியரை எல்லோரும் வியாபார ரீதியாகப் பகிஷ்கரிக்க வேண்டும்" என்று தாக்ரே கூறினார். இப்படி நடந்தால் எல்லாச் சீக்கியரும் பஞ்சாப் தீவிரவாதிகளைத் தங்கள் நாசவேலைகளைக் கைவிடும்படி வற்புறுத்துவார்கள் என்று எதிர்பார்க்கிறார், தாக்ரே. மேலும், சீக்கிய மதகுருமார்கள் தீவிரவாதிகளைச் சாதிப் பிரஷ்டம் செய்ய வேண்டும் என்றும் கூறினார்.

தாக்ரேயின் பேச்சைப் பலரும் கடுமையாகத் தாக்கியிருக்கின்றனர். வியாபார ரீதியாகச் சீக்கியரை ஒதுக்குவதால் தீவிரவாதிகள் மனம் மாறப் போவதில்லை. மேலும் ஒரு பாவமும் அறியாத பெரும்பான்மைச் சீக்கியர்கள் காரணமின்றித் துன்புறுத்தப்படுவார்கள். ஆகையால் தீவிரவாதிகளை இந்த வழியில் ஒழிக்க முற்பட்டால் சீக்கியர் அனைவருமே ஹிந்துக்களுக்கு எதிராகக் கிளம்பி விடும் வாய்ப்பு இருக்கிறது என்று பலரும் நினைக்கிறார்கள். எனவே, இம்மாதிரி கருத்துக்கள் பேச்சுடன் நின்றுவிட வேண்டும் என்பதுதான் பலரது பிரார்த்தனையாக உள்ளது.

— பி. கிருஷ்ணமூர்த்தி
ஜி. சந்திரசேகர்
புகைப்படங்கள்: சுபா



# கல்கி

1988 மார்ச் 20
மலர் 46 இதழ் 34
பிரபவ பங்குனி 7



## வாழ்க, பலராம் (ஜே)ஜாக்கர்!

"திட்டக் கமிஷன் அங்கத்தினர்களை நான் ஜோக்கர்கள் என்று குறிப்பிடவே இல்லை; அப்படி நான் சொன்னதாகக் கதை திரிக்கும் ஜோக்கர்கள் இங்கே எதிர்க் கட்சிகளில்தான் இருக்கிறார்கள்!" என்று பாரதப் பிரதமர் நாடாளுமன்றத்தில் சொன்னாலும் சொன்னார், அது பெரிய உரிமைப் பிரச்னையாகி விட்டது. எதிர்க்கட்சி உறுப்பினர்கள், "எங்களை ஜோக்கர்கள் என்று பிரதமர் இழித்துரைப்பதா? அவைக் குறிப்பிலிருந்து அச்சொல் நீக்கப்பட வேண்டும்; பிரதமர், மன்னிப்புக் கோர வேண்டும்" என்று ஆர்ப்பாட்டம் செய்தனர்.

அவைத் தலைவர் பலராம் (ஜே)ஜாக்கரோ, அசைந்து கொடுக்கவில்லை. "ஜோக்கர் என்பது ஒன்றும் மோசமான சொல் அல்ல; சொல்பவரின் உள்ளத்தையும் சொல்லப்படும் விதத்தையும் சேர்த்துப் பார்க்க வேண்டும்" என்றெல்லாம் அறிவுரை வழங்கிவிட்டு, ஜோக்கரை அவைக் குறிப்புக்களில் நிலைக்கச் செய்து, அமரவாழ்வு அளித்தார். பலராம் (ஜே)ஜாக்கருக்கு இதற்காக இந்த நாடே கடமைப்பட்டிருக்கிறது. ஏனென்றால், இந்த நாட்டில் இன்று நடப்பனவற்றையெல்லாம் ஜோக்கர்களின் ஜோக்குகளாக நாம் எடுத்துக் கொண்டு சிரித்துவிட்டுப் போனால்தான் உண்டு! ஸீரியஸ்ஸாக எடுத்துக் கொள்ள ஆரம்பித்தால்,




அருவருப்பில் வாந்தி எடுத்தே செத்துப் போவோம்; அல்லது அவமானத்தில் தூக்கில் தொங்கிச் சாவோம்!

மாஜி குடியரசுத் தலைவர் ஜெயில் சிங்கின் ஜோக்கைப் பாருங்கள்: இவர் மீண்டும் ஜனாதிபதியாகப் போட்டியிட வேண்டும் என்பதற்காக நாற்பது கோடி செலவழிக்கத் தயாராக இருந்தார்களாம். ஆனால் அவர்கள் யார்? எதிர்க்கட்சியினராகவும் இருக்கலாம்; காங்கிரஸ்காரர்களாகவும் இருக்கலாம். அமைச்சரவையிலிருந்து வெளியேறியவர்களாக வும் இருக்கலாம்; அல்லது பதவியில் இன்னும் ஒட்டிக் கொண்டிருப்பவர்களாகவும் இருக்கலாம்! யாரானாலும் சரி, பேர் சொல்ல மாட்டார் ஜெயில் சிங்! நாற்பது கோடி செலவழிக்க அவர்கள் தயாராயிருந்தது உண்மை; ஆனால் இதை நாம் பெரிதுபடுத்தக் கூடாது என்கிறார்! ஜெயில்சிங் உலக மகா ஜோக்கர் பதவிக்கே பொருத்தமானவர் என்பதில் ஐயமென்ன!

பிரதமரையே எடுத்துக் கொள்ளுங்கள். ''லட்சத் தீவுகளில் நீங்கள் விடுமுறை கொண்டாடியதற்குக் கோடிக்கணக்கில் செலவாகியிருக்கிறதே'' என்று கேட்கப்பட்டதுதான் தாமதம், அவருக்கு ரோஷம் வந்துவிட்டது! ''எனக்கான செலவை நான் கொடுத்து விட்டேனே'' என்று ஒரே போடாகப் போட்டுத் தலையாட்டிகளின் கைதட்டலையும் பெற்று விட்டார். இவர் விடுமுறை கொண்டாட ஹெலிகாப்டர் தளம் அமைக்கப்பட்டது; அதற்கு மண் முதற்கொண்டு வேறு மாநிலங்களிலிருந்து கப்பலில் போனது; அதில் இரு கப்பல்கள் விபத்தில் மூழ்கியே போய்விட்டன! அம்பலப்புழை பாயஸம் கேரளத்திலிருந்து விமானத்தில் பறந்தது; அமிதாப்பச்சன் அரசு ஹெலிகாப்டரில் திருவனந்தபுரம் வந்து இறங்கினார்! எல்லாச் செலவையும் கொடுத்து விட்டாரா ராஜீவ்! அடேயப்பா, அவ்வளவு பணக்காரரா? ஹ ஹ ஹா!

நமது தங்கராஜு குடிபோதையில் 'ஜெ' பக்கம் ஈர்க்கப்பட்டதையும் போதை தெளிந்ததும் ராமாவரம் தோட்டம் ஓடிப் போய் 'ஜா' காலில் விழுந்ததையும் மிஞ்சக் கூடிய ஜோக் இந்திய வரலாற்றிலேயே வேறு ஒன்று இருக்க முடியாது! இதற்காகவே இன்னொர் ஐந்து லட்ச ரூபாய் கறுப்புப் பணத்தை பிரீஃப் கேஸில் போட்டு அவருக்குப் பரிசளிக்கலாம்!

நமது தில்லி வழக்கறிஞர்களை விடப் பெரிய ஜோக்கர்கள் உலக அரங்கிலே தேடிப் பார்த்தாலும் அகப்பட மாட்டார்கள்! திருட்டுக் குற்றத்துக்காக ஒருவர் கைது செய்யப்பட்டு விலங்கிடப்பட்டிருக்கிறார். அப்போது அவர் தாம் வழக்கறிஞர் என்ற உண்மையை மறைத்துப் பொய் விலாசம் தந்தும் இருக்கிறார். ஆனாலும் என்ன, 'ஒரு வழக்கறிஞர் கையில் விலங்கிட்டது தவறு; அதற்காகப் பெண் போலீஸ் அதிகாரி கிரன் பேடி 'சஸ் பெண்ட்' செய்யப்பட வேண்டும்' என்று மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போட்டு மறியலும் வேலை நிறுத்தமும் செய்து வருகிறார்கள் தில்லி வழக்கறிஞர்கள்.

அப்புறம் கறுப்புப் பணத்தை மக்கள் நன்கொடை என்ற பெயரில் வெளுப்பாக்கும் ஜோக்; பீரங்கி, நீர்மூழ்கி பேர ஊழல்களை விஞ்சும் பரஸ்பர லஞ்ச ஊழல் குற்றச்சாட்டு ஜோக்ஸ்; உடன்கட்டை ஏறுவது குறித்து செக்ஸ் ஜோக்ஸ்; தமக்குள் ஆயிரம் வேற்றுமை இருந்தாலும் ராஜீவை வீழ்த்துவதில் ஒற்றுமை காணும் எதிர்க்கட்சி அணி ஜோக் என்று எவ்வளவு ஜோக்குகள்தான் இல்லை?

ஒரு கடைநிலை அரசு ஊழியர் ரேட் பேசினார்: ''பிரதமர் என்றால் முப்பது கோடி; அமைச்சர் என்றால் முப்பது லட்சம்; அதிகாரி என்றால் முப்பது ஆயிரம்; அரசு ஊழியர் என்றால் மூவாயிரம்; எனக்கு முந்நூறு தரக்கூடாதா?'' இதைக் கேட்டு விட்டு வந்தவர் சிரிக்க, ''இது ஜோக் இல்லை ஸார்'' என்றார் அந்தக் கடைநிலை ஊழியர். வந்தவர் சிரித்துக் கொண்டே பணத்தை எண்ணினார். சிரிக்காமல் என்ன செய்ய?

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

டில்லி தபால்:

# மாதவராவ் சிந்தியா 'மாட்டேன் போ' என்றார்!



• சிந்தியா — மாட்டேன் போ!



• கரன் சிங் — அரசியல் இருட்டறை!

**பு**துடில்லி அதிகார வட்டத்துக்குள் புகுந்துவிட மீண்டும் முயன்ற டாக்டர் கரன்சிங், மறுபடி தோல்வி கண்டுத் திரும்ப நேர்ந்திருக்கிறது! தமது மகளை ரயில்வே அமைச்சர் மாதவராவ் சிந்தியாவின் மகனுக்குத் திருமணம் செய்து வைத்ததன் மூலம், தில்லியில் தமது அரசியல் அதிகாரத்தை மறுபடி நிலைநாட்டிக் கொள்ளலாம் என்று எண்ணிய கரன்சிங் ஏமாற்றமடைந்திருக்கிறார்!

பத்தாண்டு காலத்துக்கு முன் இந்திரா காந்தியிடமிருந்து பிரிந்து வந்த சமயம், அதிகாரக் கட்டிலிலிருந்து இறக்கி விடப்பட்டவர் தான் டாக்டர் கரன் சிங். (மருத்துவ டாக்டர் அல்ல—பி.எச்.டி.) அதன் பிறகு மீண்டும் எப்படியாவது பதவி நாற்காலியைப் பிடித்துவிட வேண்டும் என்ற அவர் முயற்சிகள் வியர்த்தமாகியே வந்துள்ளன. இந்திரா காந்தியிடமிருந்து பிரிந்து வருவதற்கு முன், அவர் இந்திராவின் அமைச்சரவையில் இடம் பெற்றிருந்தார். அதற்கும் முன்னதாக ஜம்மு — காஷ்மீர் மாநில ஆளுனராகவும் விளங்கினார்.

பத்தாண்டுகளாக அரசியலைப் பொறுத்த மட்டில் இருட்டறையில் கிடக்கும் கரன் சிங், வெளிச்சத்துக்கு வர விரும்பி காங்கிரஸ் அதிகாரக் கேந்திரத்தைப் பல முறை அணுகிப் பார்த்துவிட்டார்; பயனில்லை! அதுமட்டுமல்ல, காங்கிரஸ் டிக்கெட் கிடைக்காமல் சென்ற பொதுத் தேர்தலில் சுயேச்சையாக நின்று பார்த்துக் காங்கிரஸ் வேட்பாளரால் தோற்கடிக்கப்பட்டார்! ஜம்மு நாடாளுமன்றத் தொகுதி மக்களில் டோர்க் பிரிவினரின் முழு ஆதரவு தமக்கு இருக்கும் என்ற இவரது எதிர்பார்ப்பும் பொய்த்துப்போனது. இது முன்னாள் காஷ்மீர் மகாராஜாவான கரன் சிங்குக்குப் பலத்த அடி! தமக்கு ஒரு திட்டவட்டமான ஆதரவுக் கூட்டம் இருப்பதை நிரூபிக்க, புதுதில்லியில் அவர் விஷால் ஹிந்து பரிஷத்தின் பேரணியைச் சில ஆண்டுகளுக்கு முன் நடத்திக் காட்டினார். ஆனால் அதுவும் மத்திய அதிகார கேந்திரத்தைக் கவரவில்லை.

ராஜ குடும்பங்கள் திருமணத்தின் மூலம், இணைந்த பிறகு, ரயில்வே அமைச்சர் மாதவராவ் சிந்தியா மூலம் தமக்கு விடிவு காலம் பிறக்கும் என்ற கரன்சிங்கின் ஆசையிலும் மண் விழுந்து விட்டது! வறட்சியால் நாடே பாதிக்கப்பட்டுள்ள நிலையில், குவாலியர் திருமணத்தின் அபரிமித செலவு, படாடோபம் முதலியன பலத்த கண்டனத்துக்குள்ளாகவே, மாதவராவ் சிந்தியாவுக்கே மத்திய அதிகார கேந்திரத்தில் இப்போது செல்வாக்குக் குறைந்து போயிருக்க, அவர் எப்படித் தமது சம்பந்தி கரன்சிங்குக்குச் சிபாரிசு செய்து உதவ முடியும்? 'மாட்டேன், போ!' என்றுதானே கூற இயலும்!

## ஆயுர்வேத ஏற்றுமதி!

**த**லைவலி என்றாலே 'மைஸின்' மாத்திரைகளை விழுங்கிக் கொண்டிருக்கும் நாம், நமது ஆயுர்வேத மருந்துகளுக்கு மேல் நாட்டில் கிராக்கி அதிகரித்து வருவதைப் பற்றிச் சற்றேனும் யோசிக்க வேண்டும். அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும், பிரிட்டனிலும் மருத்துவ ஆராய்ச்சிக் கேந்திரங்கள் பல, இப்போது இந்திய மூலிகைகளை ஏராளமாகத் தருவித்து ஆராய்கின்றன. ஆயுர்வேத மருந்துகளை அலசுகின்றன.

மைஸின் மருந்துகள் — அதாவது ஆன்டிபயாடிக்குகள் — பல வேண்டாத உடன் விளைவுகளை உடலில் ஏற்படுத்துகின்றன. புதிய உபாதைகளை உருவாக்குகின்றன. ஆனால் ஆயுர்வேத மருந்து — மூலிகைகள், இயற்கை ஔடதங்கள். ஆகையால் உடலுக்குத் தீங்கு செய்யாமல் நோயை மட்டும் குணப்படுத்துகின்றன. எனவேதான், மேல் நாட்டு மருந்து விஞ்ஞானிகள் இவற்றில் இப்போது அதிக ஆர்வம் காட்ட ஆரம்பித்துள்ளனர்.

சீக்கிரமே பெரிய அளவில் மருந்துச் செடிகளை, மூலிகைகளை இந்தியா ஏற்றுமதி செய்யும். ஆர்டர்கள் இப்போதே வர ஆரம்பித்துவிட்டன!

— ரவீந்தர் குமார்

# என் தங்கை கல்யாணி



அண்ணன் தங்கை பாசத்தை ஏற்கெனவே ஜாம்பவான்கள் எல்லாம் வெகு அழகாய்ச் சொல்லி நம்மை உருக்கி இருக்கிறார்கள். அதே அண்ணன் தங்கை பாசத்தை ராஜேந்தர் சொல்ல முயற்சிசெய்கிறார். உருக்கத்தைத் தவிர மற்ற எல்லாமே இருக்கின்றன!

அபாரமான செட்டிங்குகள், மாடுலேஷனே இல்லாத ராஜேந்தரே பேசும் ராஜேந்தர் வசனங்கள். நிறைய டிஷ்யூம், டிஷ்யூம். கண்ணீர், சாவு. ஒரு குறிப்பிட்ட ஃபார்முலாவைத் தாண்டி ராஜேந்தரின் பேனா வெளியே வர மறுப்பது தொடர்ந்தால், ரசிகர்கள் தியேட்டர் உள்ளே வரத் தயக்கம் காட்ட மாட்டார்களா?

பாடல் காட்சிகளில் சிகரெட்டுக்கு வெளியே செல்லும் நண்பர்களுக்கு இரண்டு, மூன்று பாக்கெட்டுகள் காலியாகி விடும்.

செந்தாமரை, ஸ்ரீவித்யா, புதுமுகம், புதுமுகம், புதுமுகம் இவர்களோடு தசாவதானி ராஜேந்தர் பூராப்பூராவும் வருகிறார். வழக்கம் போல் அடுக்குமொழி வசன மழை. சண்டை மழை. தங்கைமேல் பாச மழை. எல்லாம் பொழிகிறார்.

காதலை உள்ளுக்குள் மூடி வைத்து வெளியே எரிச்சல் காட்டும் போது உள்ள லாகவத்தைவிட, தங்கை மேலும், தங்கை மகன் மேலும் பொங்கும் பாசத்தைக் கட்டுப்படுத்தி ரகசியமாக வெளிப்படுத்தும் போது உள்ள லாகவத்தில் நேர்த்தி அதிகம்.

ஒய். விஜயா — இதே போன்ற ரோல்களையே தொடர்ந்து ஏற்பது வொய் விஜயா? பிரமீளா, வெண்ணிற ஆடை மூர்த்தி சம்பந்தப்பட்ட காட்சிகள் — ரசத்திற்கு முன்னால் 'வி.'

ஏராளமான பொருட்செலவில் செட்டிங்ஸ். ஆனால் 'அய்யோ, பாட்டின் ஒரு வரிக்கு இவ்வளவு பெரிய செட்டிங்கா?' என்று கூற வைக்கிறதே ஒழிய... ரசிக்கிற மாதிரி இல்லை.

படத்தில் ரசித்தே ஆக வேண்டிய விஷயம்: சிலம்பரசன் வரும் ஒவ்வொரு காட்சியும்! சிலம்பு சுற்றும் அனாயாசம் என்ன... கதை சொல்லும் அப்பாவித்தனம் என்ன...? பிகு செய்து கொள்ளும் ஊடல் என்ன...?

அட்டகாசமான கைதட்டல்களைச் சிலம்பரசனுக்கு வழங்கி விட்டுத்தான் ஒவ்வொருவரும் வெளியே வருகிறார்கள்.

— ஜெயமன்மதன்






# "நாட்டின் வளம் பெருக நாம் என்ன செய்ய?"

பங்கு மார்க்கெட்டில் புகுந்து முதலீடு செய்ய வேண்டும் என்ற ஆசை பலருக்கு இருக்கிறது. அதன் மூலம் நாட்டின் தொழில் வளப் பெருக்கத்துக்கு உதவும் எண்ணமும் இருக்கிறது. கையில் பணமும் இருக்கிறது! ஆனால் பயம்! ஷேர் விலை சரிந்து விட்டால்? நிறுவனம் நஷ்டத்தில் ஓடி, லாபப் பங்கீடு இல்லாமல் போய் விட்டால்? அரும்பாடு பட்டுச் சேமித்த பணமெல்லாம் 'அம்போ' வென்று போய்விடுமே?

இந்தப் பயத்தில் நியாயம் இருக்கிறது. வள்ளுவர் கூட, 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை' என்று கூறவில்லையா? இந்தச் சிக்கலிலிருந்து சராசரி மனிதன் விடுபட உருவானதுதான் யூனிட் டிரஸ்ட். அரசாங்கத்தின் முழு ஆதரவு பெற்றுள்ள இது, எப்படி செயல்படுகிறது?

சராசரி மனிதன், தான் நேரடியாகப் பல பங்குகளை வாங்குவதற்குப் பதில் யூனிட்டுகளை வாங்குகிறான். அவனுக்கு ஆண்டொன்றுக்கு ஒரு வட்டிக்குக் (12 சதம்) குறையாத அளவில் யூனிட் டிரஸ்ட் டிவிடெண்ட் வழங்குகிறது. இந்த லாபப் பங்கீடு உறுதி. இது சில கம்பெனிகளில் வழங்கப்படுவது போல 35 சதம் 40 சதம் இல்லைதான். ஆனால் வயிற்றி லடிக்கும் விவகாரமும் கிடையாது. 12–16 சதம் நிச்சயம். யூனிட்டுகளை, பங்குகள் போலவே மார்க்கெட்டில் வாங்கலாம், விற்கலாம். ஷேர் விலை போல் யூனிட் விலை கிடுகிடுவென்று ஜுர வேகத்தில் ஏறாது; திபுதிபுவென்று பாதாளத்துக்குச் சரியவும் செய்யாது. ஓரளவுக்கு உயர்ந்து நின்று, உயிர்த் துடிப்புடன் துள்ளிக் கொண்டிருக்கும். நஷ்டம் வராது நிச்சயம்.

யூனிட் டிரஸ்ட் என்ன செய்கிறது? தனி நபர்களிடமிருந்து தான் பெற்ற பணத்தைப் பல்வேறு நிறுவனங்களின் பங்குகளில் முதலீடு செய்கிறது. லாபமோ நஷ்டமோ தான் அனுபவிக்கிறது. ஒரு நிறுவனத்தில் அபரிமித லாபமும் மற்றொன்றில் நஷ்டமும் ஏற்படலாம். ஆனால் கூட்டி, வகுத்துச் சராசரி பார்த்தால் மிதமான லாபம் இருக்கும். அந்த மிதமான லாபத்தை, யூனிட் வாங்கி வைத்திருக்கும் நபருடன் யூனிட் டிரஸ்ட் பகிர்ந்து கொள்கிறது.

இதில் என்ன அனுகூலம்? சராசரி மனிதன் ஷேர் மார்க்கெட்டில் ஆழம் தெரியாமல் காலை விட்டு விட்டுத் தவிக்க வேண்டியதில்லை. யூனிட் வாங்கும் போது அவன் நாட்டின் தொழில் வளப் பெருக்கத்துக்கு உதவியதாக எண்ணுகிறான். தன் பணம் பல்வேறு நிறுவனங்களில் முதலீடாகியுள்ள திருப்தியைப் பெறுகிறான். அதே சமயம் 'ரிஸ்க்' இல்லை. பணம் பத்திரமாக இருக்கிறது. ஒரு வட்டிக்குக் குறையாத அளவில் லாபப் பங்கீடு கிடைக்கிறது. வருமானவரி, செல்வ வரி சலுகைகள் வேறு. போதாதா?

யூனிட் டிரஸ்ட் அடைந்துள்ள அபரிமிதமான வெற்றியைப் பார்த்து விட்டு இப்போது அதே பாணியில் அரசுடமையான சில வங்கிகளும் நிதி நிறுவனங்களை ஆரம்பித்துள்ளன. ஸ்டேட் பாங்க், 'எஸ்.பி.ஐ. மியூசுவல் ஃபண்ட்' என்று பெயரிட்டது; கனரா பாங்க், 'கான்பாங்க் மியூசுவல் ஃபண்ட்' என்று நாமகரணம் செய்தது. இவை கொடுக்கும் பாண்டுப் பத்திரங்கள், பங்கு மார்க்கெட்டில் நேரடியாக ஈடுபடத் தயங்கும் சிறு முதலீட்டாளர்களுக்கு வரப் பிரசாதம்!

— வி. கோபாலன்




# கிழிந்த சட்டையுடன் தேர்தல் பிரசாரம்!

தொண்டன்: தலைவரே, நீங்க எந்த அணியில் சேர்ந்திருக்கீங்க?

இடமதி: முட்டாள்! எந்த அணி இல்லே, எந்த அண்ணி பக்கம் சேர்ந்திருக்கீங்கன்னு கேளு!

— ஆர். அரசு, சென்னை — 106.

நண்பர்: எல்லா மீட்டிங்குலேயும் 'சிங்களத் தீவுக்குப் பாலம் அமைப்போம்'னு சொல்லிக்கிட்டே வர்றீங்களே, எதுக்கு?

இடமதி: ஹி... ஹி... என் மாமா காண்ட்ராக்ட்காரர்... அப்படி ஏதாச்சும் பாலம் போட்டா காண்ட்ராக்ட் பிடிச்சுக் குடுக்கலாமேன்னுதான்...

— சுவாதி செந்தில்குமார், திருமருகல்.

தொண்டர்: தலைவரே! நம்ம பெருந்தலைவர் பெங்களூருக்குச் சுற்றுலாப் போனவர், நாளைக்குத் திரும்பறார்...

இடமதி: அப்படியா! 'காவிரிநீர் விஷயமாகக் கர்நாடக முதல்வரைச் சந்தித்து வாதாடி, தமிழகத்துக்குத் தண்ணீர் வழங்க ஏற்பாடு செய்த பெருந்தலைவா, வருக! வருக!' என்று போஸ்டர் அச்சடிச்சு ஒட்ட ஏற்பாடு பண்ணுய்யா; சீக்கிரம்!

— எஸ். சொக்கலிங்கம், திருச்சி — 8.

இடமதி: எங்க தலைவர் இந்தத் தேர்தலின் போது கிழிஞ்சு போன சட்டையோடு தான் பிரசாரம் செய்யப் போறாரு!

நண்பர்: அடடா! ஏன் அப்படி?

இடமதி: 'ஜனவரி இருபத்தெட்டை மறக்காதீர்கள்' என்று சட்டையில் உள்ள ஓட்டையைக் காட்டியே வோட்டுக் கேட்கப் போகிறாராம்!''

— எம். பாலாஜி, வேலூர் — 1.



தொண்டர்: தலைவரே! தேர்தல் வாக்குறுதி வழங்க வேணுமா? தயார் பண்ணிட்டீங்களா?

இடமதி: ஓ! ரெடி! கேட்டுக்க: 'அமெரிக்கா போல் சோஷலிஸ ஆட்சியும் ருஷ்யாவைப் போல் ஜனநாயக ஆட்சியும் இணைந்த ஆட்சியை இங்கு கொண்டு வந்து நாட்டை முன்னேற்றுவேன்!'... எப்படி?

— ச. சா. வெங்கடேசன், சென்னை — 90.

# 10

## ஆகவே, செக்‌ஷன் 302 படி...

**கா**கிதத்தில் ஷியாம் எழுதிக் காட்டிய படி, பெண் குரலில் கேள்வியைக் கேட்டு விட்டு, சரியாகப் பேசினேனா என்று கேட்பது போல நிமிர்ந்து பார்த்தான் தீபக். கரெக்ட் என்று விரல்களால் அபிநயம் காட்டின ஷியாம் ரிசீவரில் தன் தலையைச் சாய்த்து, எதிர்முனையில் வல்லபன் பேசுவதைக் கேட்க முற்பட்டான்.

வல்லபன் அதிர்ச்சி அடைந்திருப்பதை உணர முடிந்தது.

''என்ன சார், பதிலேயே காணோம்? உங்களுக்கு இதிலே விருப்பம் இல்லேன்னு தெரியுது. நான் கேட்டதை மறந்துடுங்க. வச்சிடறேன்'' என்றான் தீபக்.

''இரும்மா. வச்சிடாதே. உன் பேரென்ன சொன்னே?''

''நிவிதா.''

''நீ மீரஜ் எலெக்ட்ரிகல்ஸ்ல என்ன வேலை செய்யறே?''

''அக்கவுண்ட்ஸ் பிரிவில இருக்கேன். திருச்சிலேர்ந்து மாற்றலாகி இங்கே வந்து சேர்ந்து...'' என்ற தீபக் ஷியாமைப் பார்க்க, அவன் இரண்டு கைகளின் மொத்த விரல்களையும் காட்டியதும், ''பத்து நாளாச்சி சார்'' என்றான்.

''இப்போ எங்கேயிருந்தும்மா பேசறே?''

''ஒரு பப்ளிக் பூத்லேர்ந்து பேசறேன் சார்.

''நீ சொன்னது நிஜம்தானா? வழக்கு சம்பந்தப்பட்ட முக்கியமான டாக்குமெண்ட்சை எடுத்து என்கிட்டே ஒப்படைக்க முடியுமா?''

''முடியும்னு நினைச்சதாலேதான் போன் செய்யறேன்.''

''சரி, எப்ப எடுத்துத் தர்றே?''

''இருங்க சார். நமக்குள்ளே வியாபாரம் பேசிக்க வேணாமா?''

''புரியுது. என்னம்மா எதிர்பார்க்கிறே நீ?''

''இந்த உதவிக்கு, எவ்வளவு தரலாம்னு நீங்க நினைக்கிறீங்க?''

''நீ சொல்லும்மா. அது நியாயமா இருந்தா ஒத்துக்கறேன்.''

ஷியாம் பேப்பரில் 'யோசித்துச் சொல்கிறேன் — நாளைக்கு போன் செய்கிறேன்' என்று எழுதிக் காட்ட, ''நான் யோசிச்சி நாளைக்கு போன் பண்றேன் சார், பேசலாம், முடிவுக்கு வரலாம்'' என்று வைத்தான்.

''பின்னிட்டே தீபக்'' என்று அவன் கையைப் பற்றி அழுத்தமாகக் குலுக்கினான் ஷியாம்.

''கிளிப் பிள்ளை மாதிரி ஒப்பிச்சிட்டேன். ஆனால் இன்னும் எனக்கு உன் ஐடியா புரியலை ஷியாம்!''

''நான்தான் சொன்னேனே தீபக். சிலந்தியோட பொறுமை என்கிட்டே உண்டு. பல்லி அவசரமா ஓடிப் போய் லபக்குன்னு பூச்சியைப் பிடிக்கும். அதிலே த்ரில்லே கிடையாது பா. ஏன் தெரியுமா? தான் பல்லிக்கு இரையாகப் போறோம்கிறதே தெரியாம ஒரே வினாடியிலே அந்தப் பூச்சி செத்துடுது. ஆனா சிலந்தி நிதானமா வலை பின்னிக் காத்திருக்கும். பூச்சி மாட்டினதும் நிதானமாப் போய் அதைப் பிடிக்கும். அந்தப் பூச்சிக்குத் தான் மாட்டிக்கிட்டோம்கிறது தெரியும். சாகப் போறோம்கிறது தெரியும். அந்த நிலையிலே உள்ள பூச்சியைப் பிடிக்கிறதிலே தான் த்ரில்லு.''

''ஒரு வகையிலே ஷியாம், நீ ஒரு ஸாடிஸ்ட்!''

''இருந்துட்டுப் போறேன். நம்ம அரசாங்கம் கூடத்தான் ஸாடிஸ்ட்.''

''எப்படி?''

''நீ ஆத்திரத்திலே ஒருத்தனைக் குத்திக் கொலை செஞ்சிடறேன்னு வையி. உனக்கு என்ன தண்டனை கிடைக்கும்?''

''மரண தண்டனை.''

''கோர்ட்ல தீர்ப்பு வாசிச்சதுமே உன்னைத் துப்பாக்கியால் சுட்டு அதை நிறைவேத்தறாங்களா? இல்லையே... அந்தத் தண்டனையை நிறைவேத்தற நாள், நேரம் எல்லாம் குறிச்சி உன்கிட்டேயே சொல்லிட்டு... அந்த மரண நேரத்துக்காக உன்னைக் காக்க வைக்கிறாங்க பாரு. அது மரண தண்டனையை விடப் பெரிய தண்டனைடா. உன்னாலே கொல்லப் பட்டவன் ஒரே நிமிஷத்திலே செத்திருப்பான். ஆனால் தீர்ப்புக்குப் பிறகு ஒவ்வொரு நிமிஷமும் சாவே. இதுவும் ஸாடிஸம் தானே?''

''உன்கிட்டே வாதம் செய்ய என்னாலே முடியாது. ஹரின்னு அறிமுகப்படுத்திக்கிட்டு உங்க ஆபீஸ் அந்தோணிகிட்டேயும், நிவிதா கிட்டேயும் ரெண்டு விதமாப் பேசச் சொன்னே. பேசிட்டேன். இப்போ நிவிதான்னு பொம்பளை குரல்ல வல்லபன் கிட்டே பேசச் சொல்லி... பேசியாச்சு... ஆனா உன் திட்டம் என்ன? அதைச் சொல்லு.''

''செஸ் விளையாட்டுல உள்ள ருசி தீபக் இது. அனுவசியமா எதிரியோட காய்களை வெட்டிச் சாய்க்கிறதுக்குப் பதிலா, நம்ம காய்களைச் சாமர்த்தியமா அமைச்சுக் கிட்டே வந்து... ஒரு கட்டத்திலே செக் வைக்

கணும். அந்த செக்கிலே எதிரி ராஜா அந்தப் பக்கம் இந்தப் பக்கம் நகரவோ, வேற காய்க ளால தன்னைத் தற்காத்துக் கொள்ளவோ முடியாம திணறணும். தட் ஈஸ் செக் அண்ட் மேட். அந்த மாதிரி நிவிதாவைக் கார்னர் செய்யறதுக்காக நான் நகர்த்தற காய்கள் தான் நீ செஞ்ச போன்கள். பாதி ஆட்டத் திலே விளக்கம் கேக்காதே. சொன்னாலும் புரியாது. நான் சொல்றபடி எல்லாம் செஞ்சிக்கிட்டே வா. நீயே புரிஞ்சிக்குவே. நாளைக்குச் சாயங்காலம் நீ என்ன செய்ய றேன்னா...''

ஷியாம் விவரமாகச் சொல்ல, தீபக் அமைதியாகத் தலையசைத்தான்.

நிவிதா வழக்கமாகப் புடைவை தவிர வேறு உடை அணிவதில்லை. தாமரைச்செல்வி மிகவும் வற்புறுத்தினதின் பேரில் அவளின் சிவப்புச் சுரிதார் உடையைப் போட்டுப் பார்க்க...

''அட்டகாசமாஇருக்குநிவிதா.இன்னிக்கு இந்தடிரஸ்லேயே ஆபீஸ்போய்ட்டுவாயேன். தலையை மட்டும் பிரிச்சி லூசாப் பின்னிக்க. நான் பின்னி விடவா?''

''வேணாம். நீ கேட்டியேன்னு போட்டுக் காட்டினேன். ஆபீசுக்கு இதைப் போட்டுக்கிட்டு... ச்சீ! கூச்சமா இருக்கு

''சொல்லப் போனா புடைவையைவிட இந்த ட்ரெஸ் தான் உடம்பு முழுக்க மூடுது. உன்னோட வினோத்குமாருக்குப் பிடிக்காது போலிருக்கு. அதனால்தான் போடற தில்லை, சரியா?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லை. அவரே பல தடவை சொல்லியிருக்கார், மாடர்ன் ட்ரெஸ் போடச் சொல்லி. எனக்குத்தான் ஈடுபாடு இல்லை...'' என்றபோதுபத்மா உள்ளே வந்து, ''நிவிதா, உனக்கு போன் வந்திருக்கு'' என்றாள்.



நிவிதா கீழே அலுவலக அறை வந்து, மார்ட்டினாவுக்குப் புன்னகை செய்து ரிசீவரை எடுத்துக் கொண்டு, ''ஹலோ, நிவிதா பேசறேன்'' என்றாள்.

''டூர் முடிச்சிட்டு ஊர் திரும்பிட்டேன். நிவி, இப்ப நான் எங்கேர்ந்து பேசறேன் சொல்லு பார்க்கலாம்.''

''வீட்லேர்ந்துதானே?''

''இல்லை.''

''ஆபீஸ் வந்துட்டீங்களா?''

''இல்லை.''

''பின்னே எங்கேர்ந்து பேசறீங்க?''

''சென்ட்ரல் ஸ்டேஷன் வாசல்லேர்ந்து. இப்பத்தான் ரயில்லேர்ந்து இறங்கினேன். வீட்டுக்குப் போகிற வரைக்கும் பொறுமை இல்லை. அதான். எப்படி இருக்கே நிவி?''

இவரையா? இவரையா சந்தேகப்படுவது? இந்த அன்

## ரூ. 1000/— பரிசு!

இந்தக் கதை 26 வாரங்கள் தொடரும். சுமார் 20, 22 அத்தியாயங்கள் முடிந்ததும் கதை தொடர்பாகச் சில கேள்விகள் தரப்படும். ஓரிரு வார்த்தை பதில்களை ஒரு தபால் கார்டில் நீங்கள் எழுத வேண்டியதுதான்!

கடைசிக் கேள்வியை இப்போதே கூறி விடுகிறோம்!: "இந்தத் தொடரில் உங்களை மிகவும் கவர்ந்த, 'நறுக்'கென்றமைந்த நாலு வரிகள் எவை?"

எனவே, கவனமாகப் படித்து வருவதுடன், 'நறுக்' வரிகளை அவ்வப்போது குறித்து வைத்துக் கொள்ளவும்!

— ஆசிரியர்.

---

பைப் பரிசோதித்துப் பார்ப்பதுகூடத் தப்பில்லையா?''

''ஏய்... என்னாச்சு? எப்படி இருக்கேன்னு கேட்டேன்.''

''நல்லா இருக்கேன் வினோத்...''

''இல்லே. ஒரு சுத்து இளைச்சிருக்கே...''

''அதெப்படிப் பார்க்காம சொல்றீங்க? ஒரு வாரத்தில என்ன மாற்றம் இருக்கு? நான் அப்படியேதான் இருக்கேன்!''

''நான் நம்ப மாட்டேன்.''

''இதென்னது பிடிவாதம்?''

''என்னை நம்ப வையேன்.''

''எப்படி நம்ப வைக்கிறது?''

''நேர்ல பார்த்தால் தானு நம்பிட்டுப் போறேன். எங்கே சந்திக்கலாம் இன்னிக்கு?''

''இன்னிக்கு வேணாம், ப்ளீஸ்.''

''ஏன்ம்மா? எதுவும் வேலை இருக்கா?''

''ஆமாம்.''

''அப்போ, நாளைக்கு?''

''அதை நாளைக்குச் சொல்றேனே...''

''குரங்குப் பிடிவாதம்! மனுஷன் ஒரு வாரம் முகத்தைப் பார்க்காம டூர் போய் அலைஞ்சிட்டுத் திரும்பியிருக்கானேன்னு, கொஞ்சமாச்சும் இரக்கம் இருக்கா? ஒக்கே, நாளைக்கு நீ போன் செய்றியா, நான் செய்யட்டுமா?''

''நானே போன் செய்யறேன்.''

''வேறே? இப்ப என்ன ட்ரெஸ் போட்டிருக்கே நிவி?''

நிவிதா தன்னைப் பார்த்துக் கொண்டு, லேசாகச் சிரித்து, ''என் ரூம் மேட்டோட சூரிதார் போட்டிருக்கேன். சும்மா போட்டுப் பார்த்தேன்'' என்றாள்.

''வாவ்! அய்யோ! நான் பார்க்க வேணுமா? நாளைக்கு அதைப் போட்டுக்கிட்டு வர்றியா?''

''பார்க்கலாம்.''

''என்ன, நீ எல்லாத்துக்கும் நழுவலாவே பதில் சொல்றே? நாளைக்கு நீ சூரிதார்ல தான் என்னைச் சந்திக்கிறே. எங்கே, எப்ப சந்திக்கறதுன்னு போன் செய்யறே. மேலே பேசாதே. வச்சிடறேன்!''

நிவிதா போனை வைத்து விட்டுத் தன் அறைக்கு வந்து சூரிதாரைக் கழற்றிவிட்டு, புடைவையே கட்டிக் கொண்டாள்.

''பார்த்தியா, நான் அவ்வளவு தூரம் சொல்லியும்...''

''இன்னைக்கு வேணாம். இதையே நாளைக்குச் சாயங்காலம் போட்டுக்கிறேன், சரியா?'' என்று கூறிவிட்டு அலுவலகத்திற்குப் புறப்பட்டாள்.

வினோத்துடன் போனில் பேசினது மனத்திற்குத் தெம்பாய் இருந்தது. உளைச்சல் சற்றுக் குறைந்து இருந்தது. அந்த ஹரியின் போன் பேச்சை அலட்சியம் செய்து விடலாம் போலிருந்தது. ஆனால் போய்ச் சந்தித்து என் வினோத் அப்படியெல்லாம் இல்லேடா முட்டாள் என்று திட்டிவிட்டு வரலாம் போலவும் இருந்தது.

அலுவலகத்தில் தன் மேஜைக்கு வந்த போது, விமலா வந்து, ''உனக்கு ஒரு லெட்டர் வந்திருக்கு. லெட்டர் பாக்ஸ்ல பார்த்தேன். எடுத்துட்டு வந்தேன். இந்தா...'' என்று கொடுத்தாள்.

நாற்காலியில் அமர்ந்து அந்தக் கவரைக் கிழிக்காமல் பார்த்தாள். இவளின் முகவரி டைப் செய்யப்பட்டிருந்தது. அதேபோல 'ஃப்ரம் — ஹரி' என்று மட்டும் டைப் செய்யப்பட்டிருந்தது. உள்ளே இருக்கும் காகிதத்தை ஓர் ஓரமாகத் தட்டிக் கொண்டு கிழித்தாள். உள்ளே இருந்த துண்டுக் காகிதத்தை எடுத்தாள்.

'எக்மோர், ஹோட்டல் இம்பீரியல், வரவேற்பறையில் மாலை 5.30 முதல் உங்கள் வருகைக்காகக் காத்திருக்கிறேன்' — என்று ஆங்கிலத்தில் டைப் செய்யப்பட்டிருக்க, கீழே 'ஹரி' என்று ஆங்கிலத்தில் கையெழுத்து இருந்தது.

மறுபடியும் உறையில் போட்டுக் கைப்பைக்குள் வைத்துக் கொண்ட நிவிதா போய்ப் பார்த்து விடுவது, என்னதான் சொல்கிறான் என்று கேட்டு விடுவது என்று தீர்மானித்தாள்.

**அ**னுமதி பெற்று உள்ளே வந்தார் அந்தோணி.

''உக்காருங்க சார்'' என்றான் ஷியாம். ''நிவிதாவைப் பத்திச் சொன்னீங்க இல்லையா, அவங்களுக்கு ஏதாச்சும் லெட்டர் வந்தா அது யார்கிட்டேர்ந்து வருதுன்னு, பார்த்து என்கிட்டே சொல்லணும்னு நான் பியூன்கிட்டே சொல்லி வெச்சிருந்தேன். இன்னைக்கு 'ஃப்ரம் — ஹரி'ன்னு போட்டு ஒரு கவர் வந்திருக்குன்னு சொன்னான்.''

''அப்படியா? சொந்தக்காரன்னு வேற பேசி சொல்லுச்சி. என்கிட்டே சொன்ன மாதிரி அதை வாங்கித் தர்றேன், இதை வாங்கித் தர்றேன்னு சொல்லி அவன் சபலப்படுத்திட்டானோ?''

''நான் உடனே கூப்பிட்டு, அறிவுரை மாதிரி சொன்னேன். அதெல்லாம் நேர்மை

தவறும நடந்துப்பேன்னுதான் சொன்னுங்க. ஆனாலும் இப்படித் தபால் எல்லாம் வர்றது சந்தேகப்பட வேண்டியதா இருக்கு. ஆதாரபூர்வமா எதுவும் தெரியாம, நடிவடிக்கை எதுவும் எடுக்க முடியாது. தப்பு நடக்கிறதுக்கு முன்னாடி கதாரிச்சிக்கிறது நல்லதில்லையா?''

''நிச்சயமா சார்!''

''அதனால நீங்க ஒரு காரியம் செய்யுங்க. மத்தியானம் லஞ்ச் நேரத்தில, அவங்க மேஜையிலேர்ந்து யாருக்கும் தெரியாம இன்னைக்கு வந்த தபாலை எடுத்துப் படிச்சுப் பாருங்க. சந்தேகத்துக்கிடமா ஏதாச்சும் அதிலே இருந்தா... என்கிட்டே எடுத்துட்டு வாங்க.

''தாராளமாச் செய்யறேன் சார். கண்காணிக்கிறது ஒண்ணும் தப்பில்லை. ஆதாரமா எதுவும் இல்லாததாலே இப்படி ரகசியமாப் பரிசோதிச்சிப் பார்க்கிறது சரிதான். நான் பார்க்கிறேன் சார்...''

அந்தோணி உணவு இடைவேளையின் போது கொஞ்சம் படபடப்பாக வந்து, பாக்கெட்டில் இருந்து அந்தக் கடிதத்தை எடுத்துக் கொடுத்து, ''நிச்சயம் இது சதி வேலைதான் சார்!'' என்றார்.

ஷியாம் படித்துப் பார்த்து, ''சொந்தக்காரங்க இப்படித்தான் ரகசியமா தபால்ல இடம், நேரம் எழுதிச் சந்திப்பாங்களா சார்? ம்கூம். இது ஏதோ ரகசிய சதிதான். இதே நேரத்திலே வேறே ஒரு நபரை நான் போகச் சொல்லிக் கண்காணிக்கிறேன். அவங்களுக்கு அறிமுகம் இல்லாத நபரா இருக்கணும். இப்போ இந்தக் கவரையும், லெட்டரையும் ஜெராக்ஸ் பிரதி எடுத்து என் கிட்டே கொடுங்க. ஒரிஜினலை எடுத்த இடத்திலே வெச்சிடுங்க,'' என்றான்.

''சரி சார்.''

''அப்புறம்... ஆத்மா டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் மோசடி சம்பந்தப்பட்ட டாக்குமெண்ட்ஸ், ரெக்கார்ட்ஸ் ரூமில் இருக்க வேணும். ஆபீஸ்ல எல்லாருக்கும் அந்த ரூமுக்குப் போய்வரச் சந்தர்ப்பம் இருக்கு. அதனால, அதை இங்கே எடுத்துக்கிட்டு வாங்க, சொல்றேன்.

அந்தோணி பூம்பூம் மாடு போல எல்லாவற்றுக்கும் தலையை ஆட்டிவிட்டுச் சென்று பத்து நிமிடங்களில் நீளமான ப்ரௌன் கவருடன் வந்தார்.

அதை வாங்கித் தன் மேஜையின் முதல் டிராயரில் வைத்துப் பூட்டிய ஷியாம், ''நிவிதாவை நீங்க எதுவும் கேக்க வேணும். நான் பார்த்துக்கறேன். கொஞ்ச நாளைக்கு டாக்குமெண்ட்ஸ் இங்கேயே இருக்கட்டும். இங்கே இருக்கிறதை யார்கிட்டேயும் சொல்ல வேணும். நீங்க போங்க'' என்றான்.

ஐந்து மணிக்கு அலுவலகம் முடிந்ததும், நிவிதா புறப்பட்டு ஓர் ஆட்டோ அமர்த்திக் கொண்டு எக்மோருக்கு ஓட்டச் சொன்னாள்.

(தொடரும்)



# கொடி பிடிப்பது கொள்கைக்கல்ல...

## பாரிஜாதன்

''சார்.... இந்த பாக்டரியில் தலைவர்களுக்கு மதிப்பே கிடையாதுங்க'' — அக் கூட்டத்தில் ஒரு தலைவர் தமது ஆதங்கத்தை வெளியிட, மாநில அரசின் கட்டுப்பாட்டிற்குள் இருக்கும் அந்த கூட்டுறவு சர்க்கரை ஆலையின் தொழிற் சங்கத் தலைவர்களின் கூட்டமானது, மானேஜிங் டைரக்டரின் அறையில் நடந்து கொண்டிருந்தது.

ஏ.சி. ஓடிக் கொண்டிருக்க, தாய் டிபார்ட்மெண்டில் மாவட்ட வருவாய் அலுவலர் என்றும் இங்கு மாற்றலாகி இப்பதவியில் மானேஜிங் டைரக்டர் என்றும் அழைக்கப்படும் அவர் நடுநாயகமாக அமர்ந்திருந்தார்.

ஒரு தொழிற் சங்கத்திற்கு இரண்டு பிரதிநிதிகள் வீதம், ஏழு சங்கங்களுக்கு மொத்தம் பதினான்கு பேர் வந்து குழுமியிருந்தனர்.

எம். டிக்குச் சற்றுத் தள்ளி, பேக்டரி மானேஜர் என்கின்ற ஆலை மேலாளர் — பாதி அடக்கமாகவும், மீதியில் பந்தாவும் பயமுமாக அமர்ந்திருந்தார்.

சற்று எதிரே — எல். ஓ. என்னும் லேபர் ஆபீஸர், கையில் மினிட்ஸ் புத்தகத்துடன் — நமக்கெதற்கு பந்தா? பயமே போதும் என்பது போல் அமர்ந்திருந்தார்.

''சார்.... இந்த பாக்டரியில வர வரத் தலைவர்களை மதிக்கறதேயில்லைங்க...'' — மறுபடியும் அதே தலைவர் எம்.டியைப் பார்த்துக் கூறியபோது, ''என்ன சொல்றீங்க தங்கராஜ்?'' என்று எம்.டி கேட்டார்.

''ஒண்ணுமில்லைங்க... இந்த நம்ம பேக்டரி கேண்டீன்ல நடக்கற அநியாயம் தாங்க....''

எல். ஓ. — கேண்டீன் என்று கூறியவுடன் பயந்து பதறி, தமது பொறுப்பிலிருக்கும் கேண்டீன் பற்றி என்ன குறை சொல்லப் போகிறாரோ எனப் பயந்து, எம். டி யையும் சொன்ன தலைவரையும் மாறி மாறிப் பார்த்தார்.

''என்ன தங்கராஜ்... என்ன நடந்தது... புரியும்படி சொல்லுங்க?''

''வேற ஒண்ணுமில்லைங்க... கேண்டீன்ல.... தலைவர்கள் நாங்க 'டீ' குடிச்சா... டோக்கன் கேட்கிறாங்க, அதுதான்....''

எம்.டி வந்த சிரிப்பை அடக்கி, அவரை ஓர் அழுத்தமான பார்வை பார்த்தார்.

தொடர்ந்து வேறொரு சங்கத் தலைவரும் ஆரம்பித்தார்.

''சார்... டீக்கு இருபது பைசா டோக்கன் தான், குடுத்திடலாம்.... ஆனால் எங்களது கௌரவம் என்னாகிறது? டோக்கன் குடுத்து டீ குடிக்கும் ஒரு தொழிலாளிக்கும், தலைவருக்கும் வித்தியாசம் வேண்டாமுங்களா... அதனால் இதற்கொரு ஏற்பாடு செய்தாகணும் நீங்க...'' என்றார்.

மற்ற பிரச்னைகளில் அடித்துக் கொண்டாலும், இவ்விஷயத்தில் மட்டும் அனைவரும் ஒன்றாகி, ''ஆமாம்... ஆமாம்... வாஸ்தவம் தான்.... இதற்கொரு ஏற்பாடு செய்தே ஆகணும்....'' என்று பின்மொழிந்து வற்புறுத்தினர்கள்.

அவன் — தான் சார்ந்திருக்கும் யூனியனின், இச் சர்க்கரை ஆலையின் கிளைச் சங்க இரண்டாவது தலைவராகப் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பவனும், முதல் தடவையாகக் கூட்டத்தில் கலந்து கொள்பவனுமாகிய அவன் — இதையெல்லாம் கண்டு மனம் நொந்தான்.

இதே சர்க்கரை ஆலையில் தொழிலாளியாக வேலை செய்த அவன் தந்தை — இரண்டரை ஆண்டுகளுக்கு முன்பு, ஆலையினுள்ளே ஒரு விபத்தில் மரணமடைய, இறந்தவருக்கு வாரிசு ஒப்பந்த அடிப்படையில், இந்த ஆலையில் ஒரு தொழிலாளியாக வேலைக்குச் சேர்ந்தான்.

அவனது தந்தை — தான் ஆக முடியாததையெல்லாம் தம் மகன் ஆக வேண்டும் எனக் கனவு கண்டவர்.

காந்தி மகானையும், நேரு, நேதாஜி போன்ற தலைவர்களையும் ஆதர்ஷ புருஷர்களாகக் கொண்டு தம் மகன் வாழ வேண்டும் என்று நினைத்தவர். எனவே மகனுக்குச் சிறு வயதிலிருந்தே அந்தத் தலைவர்களின் வரலாறுகளைப் போதித்து வந்தார்.

அப்ரண்டீஸாக இருந்து பின் நிரந்தரமாக்கப்பட்டபோது, இளைஞர்களுக்கு வாய்ப்பளிக்க வேண்டும் என்கிற அவனுடைய யூனியனின் கொள்கை அடிப்படையில் — அவன் வயதொத்தவர்களில் இவன் தான் கல்லூரி வரை சென்றவன் என்பதால் கிளைச்சங்க இரண்டாவது தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டான், ஒரு வாரத்திற்கு முன்னால்.

இந்த நினைவுகளில் மூழ்கியிருந்தவனை எம். டியின் குரல் உசுப்பியது.

''சரி... தங்கராஜ் ஏற்பாடு செய்ய றேன்...'' என்றவர் — அப்புறம் தங்கராஜ்... போன வாரம் கேட் மீட்டிங்கில என்னையும் நிர்வாகத்தையும் காரசாரமாத் திட்டிப் பேசி னீங்களாமே.... என்ன....'' குரலில் கோபத் தையும் முகத்தில் சிரிப்பையும் காட்டிக் கேட்ட போது —

''சார்... தொழிலாளிக்கு முன்னால... அவன் கை தட்டறதுக்கு ஏதாவது அவனுக் குத் தகுந்தபடி பேசறதுதான்... அப்பத்தான் நாங்க யூனியன் நடத்த முடியும்... அதை யெல்லாம் அப்பவே அங்கேயே நாங்க மறந் திடுவோம்... நீங்களும் மறந்திடணும்...'' அவர் மறக்கச் சொல்லிக் குழைந்தார்.

எம்.டியும் மறந்ததாகக் காட்டிக் கொண் டார். தொடர்ந்து மற்ற விஷயங்கள் பற்றி விவாதிக்கப்பட்டன. சிற்சிலவற்றில் முடி வும் எடுக்கப்பட்டது. பின் இக் கூட்டம் கூட்டப்பட்டதற்கான — ஆள் எடுப்பது பற்றிய முக்கிய ஷரத்து விவாதத்திற்கு எடுத் துக் கொள்ளப்பட்டது.

எம்.டி எல்லாத் தலைவர்களையும் ஒரு பார்வை பார்த்து, பின் ஒருவித அழுத்தத்து டன் பேச ஆரம்பித்தார்...

''அடுத்த மாதம் நம்முடைய பேக்டரி யில் நூற்றி நாற்பது தொழிலாளிகள் ரிடை யர் ஆகறாங்க... அந்த இடங்களை பில்லப் பண்ணணும்... அதைப் பற்றி நாம் விவா திக்கணும்...''

''எந்தெந்த டிபார்ட்மென்ட்ல எவ்வளவு பேருங்க சார்?'' — ஒரு யூனியன் தலைவர் கேள்வி எழுப்பினார்.

எம். டி., எல். ஓ. வைப் பார்க்க, அவ ரும் பைலைத் துழாவி எடுத்து, எம்.டி. கையில் பணிவன்புடன் சமர்ப்பிக்க, அதைப் பார்வையிட்டபடி டிபார்ட்மென்ட் வாரியாகக் காலியாகும் இடங்களைக் கூறி, மொத்தம் நூற்று நாற்பது இடங்கள் என் றார்.

''வாரிசுக்குத்தான் ஆள் எடுக்கணும் என்கிற எங்கள் நீண்ட நாள் கோரிக்கை என்ன ஆச்சுங்க?'' — மைனாரிட்டி யூனி யனைச் சேர்ந்த ஒரு தலைவர் கேள்வி எழுப் பினார்.

''அது நமது அரசுக் கொள்கைக்கு எதி ரானது பாண்டியன்.... ஏற்றுக் கொள்ள முடியாது.''

''அப்ப என்ன செய்யப் போறீங்க?''

''வேலை வாய்ப்பு அலுவலகத்தின் மூல மாகத்தான் ஆள் எடுக்கணும்...

''தொழில்லாளி கிட்டப் போய் நாங்க என்ன பதில் சொல்றது?''

''அது உங்க பிரச்னை பாண்டியன்...''

''அப்ப நாங்க எதுக்கும் ஒத்துழைப்புக் கொடுக்க முடியாது!''

''உங்க யூனியன் மட்டுமா.... அல்லது எல்லா யூனியனுக்கும் சேர்த்தே இதை நீங்க சொல்றீங்களா.... — எம்.டி. பிரச்னையை எல்லோருக்கும் திருப்பி விட்டார்.

''எல்லா யூனியனும்தான் சார்...''

இதை அந்த மைனாரிட்டி யூனியன்





நிருபர்: இப்போது, நீங்கள் 'ஜா' அணியா? 'ஜெ' அணியா...?

அரசியல்வாதி: தேர்தல் முடிவதற்குள், அப்படி என்னய்யா, உமக்கு அவசரம்...?

— ஆர். வசந்தகுமார்.

தலைவர் கூறி முடித்தவுடன், மெஜாரிட்டி யூனியனைச் சார்ந்த தலைவர் தங்கராஜ் கோபத்துடன் கத்த ஆரம்பித்தார்.

"எல்லா யூனியனுக்கும் நீ என்னய்யா வக்காலத்து... உன் வேலையை மட்டும் பாருய்யா... உன் யூனியன்ல ஐம்பது பேரை மட்டும் வெச்சுக்கிட்டுப் பெருசாப் பேச வந்துட்டே... அதுதான் அரசாங்கக் கொள்கைக்கு ஒத்துவராதுன்னு சொல்லிட்டாரில்லே... விடவேண்டியதுதானே... அதைப் போய்ச் சும்மா... சும்மா... கௌறிக்கிட்டிருக்கறே...." என்று கூறிய படியே எம்.டி. பக்கம் திரும்பிப் பேச ஆரம்பித்தார்.

"சார்... நாங்க ஆதரவு கொடுக்கிறோம். வெளியில இருந்தே ஆள் எடுத்துக்கங்க... ஆனால் யூனியனுக்கு எவ்வளவு கோட்டா கொடுக்கப் போறீங்க?" என நேரிடையாகவே விஷயத்திற்கு வந்தார்.

யூனியன் கோட்டா என்றவுடன் கிடைக்கப் போகும் தங்களின் இலாபங்களைக் கணக்கிட்டு, ஒவ்வொரு தலைவரும் கண்களில் கனவுகளை இமைகள் தாங்காத அளவிற்குச் சுமந்தார்கள்.

எம். டி. எல்லாத் தலைவர்களையும் ஒரு பார்வை பார்த்தார். பின் தொழிலாளர் அதிகாரியையும், ஆலை மேலாளரையும் பார்த்தார்.

எல். ஓ., எம்.டி. எதற்குப் பார்க்கிறாரென்று பயத்தில் நெளிந்தார்.

ஆலை மேலாளர், எம்.டி. எது சொன்னாலும் தலையாட்டத் தலையை ரெடியாக வைத்துக் கொண்டார்.

"எப்படிச் செய்யலாம்.... சொல்லுங்க..." தலைவர்களைப் பார்த்து எம்.டி. திருப்பிக் கேட்டார்.

"சதவிகிதக் கணக்கு வெச்சுக்கலாம்..."— உறுப்பினர் எண்ணிக்கை அதிகமுள்ள, ஒரு பெரிய யூனியனைச் சேர்ந்த தலைவர் ஒருவர் கூற, தலைவர் தங்கராஜும் தமது யூனியனில் உறுப்பினர் எண்ணிக்கை அதிகம் இருப்பதை நினைத்து அதனை வழி மொழிந்தார்.

எம்.டி. இதுபற்றிய யோசனையில் இருக்கையில், அவன் புதிதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பதாலும், இதுவே அவனுக்கு முதல் கூட்டமாக இருப்பதாலும் — ஆட்கள் தேர்ந்தெடுப்பது நிர்வாகத்தின் வேலை, இவர்கள் ஏன் யூனியனுக்குக் கோட்டா கேட்கிறார்கள் என்று புரியாமலும் சந்தேகத்துடன், "சார்... யூனியனுக்குக் கோட்டா எதுக்கு?" — எம். டி. யைப் பார்த்துக் கேட்டான்.

அவரும் அவனைப் புதிதாகப் பார்க்க, தொழிலாளர் அதிகாரி, இதற்குச் சிரிக்கலாமா வேண்டாமா என எம்.டி.யின் 'மூடை' அறிய அவர் முகத்தைப் பார்க்க, அவரும் தெரியும்படி சிரித்தால் பதவிக்குள்ள மதிப்புப் போய் விடுமோ என நினைத்துப் புரியும்படி சிரித்த போது, எல். ஓ. உதட்டை மட்டும் அசைத்துக் கொண்டார். ஆலை மேலாளர்—லேசாக மிக லேசாக எம்.டி. பார்க்காத வண்ணம் சிரித்துக் கவிழ்ந்து கொண்டார்.

மற்ற யூனியன் தலைவர்கள் 'கொல்'லென்று சிரித்த போது, அவனுடைய யூனியன் தலைவர் தங்கராஜ் மட்டும் கோபத்தில் ஆவேசமாகக் கத்தினர்.

"டேய்... நீ சின்னப் பையன்.... உனக்கு வெவரம் பத்தாது... நடக்கிறதை மட்டும் வேடிக்கை பார்த்திட்டுச் சும்மா உட்கார்."

அவன் மௌனமானான்.

கோட்டா பற்றிய விவாதம் தொடர, கடைசியில் எம்.டி. "யூனியன் அங்கத்தினர் அடிப்படையில் 'பர்செண்டேஜ்' வைத்துக் கொள்ளலாம்..." என்றார்.

இதைக் கேட்டவுடன் உறுப்பினர்கள் எண்ணிக்கையின் அடிப்படையில், மைனாரிட்டி யூனியன் என்றும், மெஜாரிட்டி யூனியன் என்றும் பிரிந்து இரு அணிகளாகி மோதத் தயாரானார்கள்.

சின்ன யூனியன்காரர்கள் தங்களது உறுப்பினர்கள் எண்ணிக்கையை நினைத்துப் பயந்து, 'சதவிகிதம்' வேண்டாமென்று சப்தம் போட்டார்கள்.

பெரிய யூனியன்காரர்கள் தங்களது உறுப்பினர் எண்ணிக்கையை நினைத்து சதவிகிதம்தான் வேண்டுமென்று சண்டையிட்டார்கள்.

இவ்வளவு சுயநலமா இவர்களிடம் என்று எண்ணியபடி இதையெல்லாம் பார்த்து, அவன் மனம் நொந்து அமர்ந்திருந்தான்.

எப்படியோ அவர்களது சண்டை ஓய்ந்து இறுதியில் பேசுவதற்கு ஒன்றுமில்லாமல் ஒவ்வொருவராகக் களைத்தபோது, இறுதியில் எம். டி. பேச ஆரம்பித்தார்...

"இங்க பாருங்க... சின்ன யூனியனுக்குத் தகுந்தபடி ஒரு கோட்டாவும், பெரிய யூனியனுக்குத் தகுந்தபடி ஒரு கோட்டாவும் ஒதுக்கறேன்... இப்படித்தான் செய்ய முடியும்... என்ன சொல்றீங்க?"

அவரது குரலில் ஒரு தீர்மானம் தொனிக்க, இறுதியில் அனைவரும் அந்த முடிவையே ஏற்றுக் கொண்டதால், பின் டீயும் பிஸ்கட்டும் பரிமாறப்பட்டுக் கூட்டம் முடிவுற்றது.

எல்லோரும்... ..எல்லோரும்... ..எல்லோரும்...







எல்லோருமே
விரும்புவது
நியூட்ரின்
ட்விங்க்




- ஆரஞ்சு
- லெமன்
- மேங்கோ
- பைனாப்பிள்
- கிரேப்

ட்விங்க்
ஸாஃப்ட் டிரிங்க் கான்ஸன்ட்ரேட்




சுவைகளும் புதுமை, சுவைத்திட இனிமை

ACIL/090/87-Tam

இந்த ஒப்பந்த அடிப்படையில் அவன் சார்ந்திருக்கும் யூனியனுக்கு ஐந்து பேர் ஒதுக்கப்பட்டது.

எம்.டி.யின் அறையை விட்டு எல்லோரும் வெளியே வர, அவரவர் யூனியனைச் சேர்ந்தவர்கள் தலைவர்களைச் சூழ்ந்தார்கள்.

இவனது யூனியன் தொழிலாளர்களும் நின்று கொண்டிருந்தார்கள்.

"தலைவரே மீட்டிங் என்னுச்சு?" — ஒரு தொழிலாளி கேட்டான்.

"எல்லாம் நல்லபடி முடிஞ்சது...." — பதிலுரைத்தார் தலைவர் தங்கராஜ்.

"தலைவரே என்னுடைய இன்கிரிமென்டை நிறுத்தி வெச்சது பத்தி ரெண்டு மாசமாச் சொல்லிக்கிட்டிருக்கேன்... இன்னைக்கு முடிச்சுக் குடுக்கறதாச் சொன்னீங்க... எம்.டி. கிட்டே பேசுனீங்களா?" — வேறொரு தொழிலாளி கேட்க...

"எல்லாத்தையும் எம்.டி.கிட்டே பேசிட்டேன். கடைசி ஒரு மணி நேரம் உங்க விஷயம் பற்றிதான் அவர்கிட்ட விவாதம்... முடிச்சுடலாம்..."

அவரது அப்பட்டமான பொய்யை நினைத்து அவன் அதிர்ந்தான்.

இவர்கள் எங்கே தொழிலாளியைப் பற்றிப் பேசினார்கள்? தங்களது குறையைப் பற்றியல்லவா பேசிக் கொண்டிருந்தார்கள்.

இவன் ஏதோ வாயெடுக்க, அவர் அவனைப் பார்வையாலேயே அடக்கி, நின்று கொண்டிருந்த தொழிலாளர்களில் ஒருவரைப் பார்த்துக் கூற ஆரம்பித்தார்...

"நம்ம கட்சித் தலைவர் இந்த வழியா நாளைக்கி வர்றாரில்லே... வரவேற்புக் கொடுக்கணும். வளைவு, தட்டி எழுதறது... எல்லாத்தையும் நீதான் இருந்து பார்த்துக்கணும்... கூட நம்முடைய ஆட்களையும் சேர்த்துக்க... பணம் இருக்கா செலவுக்கு?.... கொடியெல்லாம் இருக்கில்லே... தோரணம்..."

அந்தத் தொழிலாளி தலையாட்ட, "சரி... புறப்படு. மத்தவங்களையும் கூட்டிட்டுப் போ..." என்று அவனையும் அவனுடன் இருந்தவர்களையும் அனுப்பி வைத்தார்.

அதுவரை அவனுள் பொறுமையாக இருந்த சத்தியமும் நேர்மையும் பொங்கி வந்தது இப்பொழுது.

"என்னங்க தலைவரே... அவுங்க பிரச்சினையைப் பற்றி நாம எங்கே பேசினோம்?"

"டேய்... பேசாட்டாக்கூட பேசினேன்னு தான் சொல்லணும். தெரிஞ்சுதா... அப்பத்தான் அவனுக்கும் நம்மகிட்ட நம்பிக்கை வரும்... யூனியனும் நடத்த முடியும். சத்தியம் நேர்மையெல்லாம் வீட்டுலேயே வெச்சுட்டு வந்துரு. என்ன..."

"அதிருக்கட்டும்... எம்.டி. ரூம்க்குள்ள தலைவர்களெல்லாம் இவ்வளவு சுயநலமாவா நடந்துக்கறது...?"

"நீ என்ன சும்மா சும்மா கேள்வி கேட்டுக்கிட்டே இருக்கே... எம்.டி. ரூமுக்குள்ளேயும் இப்படித்தான் கேட்டே... ஒழுங்கா வேலையைப் பாருடா..." அவர் குரலிலும் கண்களிலும் அனல் பறந்தது.

அவன் அதிர்ந்தான்.



"எங்களுக்குப் பெண்ணைப் பிடித்து விட்டது. மேலே பேசலாமா?"

"தாராளமா, வாங்க மாடிக்குப் போகலாம்!"

— கீழை. அ. கதிர்வேல்.

நேர்முகத் தேர்வுக்கு இன்னும் ஒரு வார காலமே இருந்தது. ஆனால் அலுவலகத்திலிருந்து, நம்பர்கள் அனுப்பக் கோரி வேலை வாய்ப்பு அலுவலகத்திற்குத் தபால் அனுப்பியாகி விட்டது.

தலைவர் தங்கராஜை நாலைந்து நாட்களாக அவனால் பார்க்க முடியவில்லை.

இன்று அவன் கிளைச் சங்க அலுவலகம் வந்த போது, அங்கே அவர் பேப்பர் படித்துக் கொண்டிருந்தார்.

இவன் வணக்கம் சொல்லி விட்டு அருகில் சென்று அமர, அவர் தலையசைத்து "வா" என்றார்.

சிறிது நேரம் மௌனமாக அமர்ந்திருந்தவன், "தலைவரே..." என்று பீடிகை போட்டான்.

"என்ன?" என்று அவர் நிமிர்ந்த போது—

"ஒண்ணுமில்லே... நம்ம யூனியன் கோட்டாவான ஐந்து பேருக்கும், நீங்க எம்ப்ளாயிமென்ட் எக்சேஞ்சில்... நம்பருக்கெல்லாம் ஏற்பாடு செஞ்சு, பெயர்களையும் எம். டி. கிட்ட குடுத்துட்டதாக் கேள்விப்பட்டேன்... அந்த ஐந்து பேரும் யாரு?"

"இப்ப என்னங்கறே?"

"இல்லே... நம்முடைய யூனியனைச் சார்ந்த எத்தனையோ குடும்பம் சம்பாதிக்கிற ஆண் துணையை இழந்து கஷ்டப்படுது. உங்ககிட்டயே வந்து, எத்தனை குடும்பம் கஷ்டத்தைச் சொல்லிப் பையன்களையாவது ஏதாவதொரு வேலையில் சேர்த்து விடுங்கன்னு அழுதிருக்காங்க... அவங்களிலிருந்து இந்த அஞ்சு பேரையும் சேர்த்து விட்டிருக்கலாமே... இப்படி பணத்துக்காக...."

"டேய்... உனக்கு வெவரம் பத்தாது... நான் சொல்றதை வாங்கிக்க... உனக்கு ஓர் ஆள் கொடுக்கறேன்... அந்த ஆள் கொடுக்கிறதை வாங்கிக்கிட்டுப் பேசாம இரு. அனாவசியமா வெளியே பேசாதே..."

"தலைவரே, எதிலும் நியாயம் தர்மம்

வேணும்... நம்ம கட்சித் தலைவர் கூட நேற்றுப் பேசியிருக்கார்... எல்லாவற்றி லும் நேர்மையோடு இருந்து செயலாற்ற வேண்டுமென்று... ஏன், நம்முடைய மாவட்ட தலைமைச் சங்கத் தலைவர் கூட இதையேதான் வற்புறுத்திப் பேசினர்... நீங்களும் இருந்தீங்களே...''

அவருக்குக் கோபம் வந்தது. இந்த பதி னெட்டு வருட தலைவர் வாழ்க்கையில், தம்மை யாரும் கேள்வி கேட்டது கிடை யாது. இவன் கேட்பதா? கண்களும் முக மும் சிவந்து அவனை முறைத்தார்.

''ஆமாம்... பேசிட்டாங்க.... நேர்மை யாயிருந்தால் எப்படியடா.... கட்சி நிதி, தேர்தல் நிதின்னு கொடுக்கறது? நீ ஒழுங்கா இருக்கிறதாயிருந்தால் இரு... இல்லாட்டி ராஜினமாப் பண்ணு...

அவர் மிரட்ட இவன் மௌனமானன். எல்லாமே கசப்பாக இருந்தது.

இவரை இப்படியே விட்டு விடலாமா? கூடாது. மாவட்ட தலைமைச் சங்கத் தலைவ ரைப் பார்த்தால் என்ன!

அங்கிருந்து நாற்பது கிலோ மீட்டரில் உள்ள மாவட்ட தலைமைச் சங்கத்திற்குச் செல்ல முடிவு செய்தான்; போனன்.

பார்வையாளர்கள் வந்து போய்க் கொண்டிருக்க— இவன் காத்திருந்து உள்ளே சென்றன்.

தடித்த தங்க பிரேம் போட்ட கண்ணடியி லும், வெற்றிலை குதப்பிய வாயுடனும் இருந் தார் அவர். முகத்தில் அழுத்தமான அனு பவ ரேகைகள் ஆழம் காண முடியாத ஆள் என்றது.

''வா தம்பி, உட்கார்... என்ன விஷ யம்? உங்க பேக்டரியெல்லாம் எப்படி யிருக்கு? ஆள் எடுக்கப் போறீங்க போலி ருக்கு... தங்கராஜ் எப்படியிருக்கார்...?''

''பேக்டரியெல்லாம் நல்லாத்தானிருக் குங்க தலைவரே... தங்கராஜ் செய்யறதுதான் ஒண்ணும் பிடிக்கலே. நேர்மையாகவே நடந் துக்க மாட்டேங்கிறர்... அதான் உங்ககிட்ட பேசிட்டுப் போகலாம்னு வந்தேன்.''

தலைவர் சிறிது நேரம் அவனை உற்றுப் பார்த்தவர், பின் முகவாயைத் தடவியபடி பேச ஆரம்பித்தார்.

''அப்படி செய்யற ஆளில்லையே.... நேர்மையான ஆளாச்சே... ரெண்டு நாளைக்கு முன்பு கூட இங்கே வந்திருந்தார்... உனக்கும் ஓர் ஆள் கொடுக்கச் சொல்லிட் டேனே... கொடுக்கிறதை வாங்கிக்க...''

''என்ன தலைவரே நீங்களும் இப்படி சொல் றீங்க...''

''ஒரு ஆள் பத்தாதுங்கறியா?''

இவனுக்குக் கோபம் வந்தது.

தலைவரே இதுவே கூடாதுங்கறேன்... நீங்ககூட்டத்தில் பேசினீங்களே அந்தநேர்மை தேவைன்னு சொல்றேன்.''

அவர் சிரித்தார். இவன் எரிச்சலுற்றன்.

''நீ யூனியனில் இந்தப் பொறுப்புக்கு வந்து எவ்வளவு நாள் ஆச்சு தம்பி?''

இவன் மௌனம் காக்க, அவர் வார்த் தைகள் நெருப்பாகவும் நிதானமாகவும் வெளி வந்தன.

''இங்க பாரு யூனியன் விவகாரமெல்லாம் இப்படித்தானிருக்கும்... நீ சரியா இருக்கற துன்னு பொறுப்பில் இரு... இல்லே, பொறுப்பை விட்டு விலகிடு... இல்லாத கலாட்டாவெல்லாம் உள்ளேயிருந்துக்கிட் டுச் செய்யாதே.... அப்படித்தான் செய் வேன்னு... நடக்கிற கதையே வேற... சரி, போய்ட்டு வா...''

அவன் வெளியே வந்தான். வெளியே அடுத்த நாளின் குடியரசு தினக் கொண் டாட்டத்திற்காக, கொடி மரம் நடக் குழி தோண்டிக் கொண்டிருந்தார்கள்.

ஆரம்பத்தில் — தொண்டனுகக் கொடி மரம் நடக் குழி தோண்டிய இந்தத் தலைவர் கள், இன்றும் அதை மறக்காமல் இன்னும் தோண்டிக் கொண்டிருக்கிறர்கள். ஆனல் கொடி மரத்திற்கல்ல; கொள்கைகளுக்கு... என்று நினைத்தபடி நடக்க ஆரம்பித்தான்.










— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

# தள்ளாத வயது
# தளராத நம்பிக்கை...

## சிட்டி யூனியன் வங்கியில் நம்பிக்கை வையுங்கள் !

எமது முதுபெரும் வாடிக்கையாளர் திருமதி. பார்வதி அம்மாளை பாருங்கள். அவரது தேவைகள் அத்தனையும் எமது பணியாளர்கள் கனிவுடன் கவனித்துக் கொள்வதாக அவர் கூறுகிறார். அவரது சேமிப்பு வளர சிட்டி யூனியன் வங்கி உதவுகிறது.

அவரது தேவைகளைக் கண்டறிந்து வழிகாட்டுகிறது.

முழுமையான ஈடுபாடு; அதுவே எமது குறிக்கோள்!

- சேமிப்புக் கணக்குகள்
- மாதாந்திர சேமிப்புத் திட்டங்கள்
- ரொக்கச் சான்றிதழ்கள்
- வாமன விஸ்வரூப திட்டம்
- நிரந்தர இட்டு வைப்புகள்
- குடிபெயர்ந்தோர் கணக்குகள்
- மற்றும் உங்கள் தேவைக்கேற்ற எண்ணற்ற சேமிப்புத் திட்டங்கள்.




**CUB**

**சிட்டி யூனியன் பாங்க் லிட்.,**

பதிவு அலுவலகம்: கும்பகோணம்-612 001.

CUB—உங்கள் வளர்ச்சிக் கேற்ற வங்கி.

MCS/CUB/269

# பொன்னியின்




## அத்தியாயம் 53
## அபய கீதம்



இளவரசர் அருள்மொழி வர்மர் பார்த்திபேந்திரனுடைய கப்பலுக்குப் போய்ச்சேரும் வரையில், தொண்டைமான் நதியின் முகத்துவாரத்தில் நின்றவர்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கப்பலில் இளவரசர் ஏறிக் கொண்ட உடனே அவரை ஏற்றிச் சென்ற படகு திரும்பியது.

சேநாதிபதி பூதி விக்கிரம கேசரி குதூகலம் அடைந்திருந்தார் என்று அவருடைய முகக் குறி காட்டியது.

"ஆண்டவன் நம் கட்சியில் இருக்கிறார்; சந்தேகமில்லை. இளவரசரின் திருமேனியில் உள்ள சங்கு சக்கர சின்னங்கள் பழுதாகப் போய் விடுமா? பார்த்திபேந்திரன் அவரைப் பத்திரமாகக் காஞ்சி கொண்டு போய்ச் சேர்த்து விடுவான். நாமும் நம் படைகளுடன் தஞ்சையை நோக்கிப் புறப்பட வேண்டியதுதான்!" என்று தமக்குத் தாமே சொல்லுகிறவர் போல் கொடும்பாளூர் வேளார் உரத்துச் சொல்லிக் கொண்டார்.

உடனே பக்கத்தில் நின்ற ஆழ்வார்க்கடியானைப் பார்த்தார்.

"வைஷ்ணவனே! நீ இங்கு நிற்கிறாயா? அதனால் பாதகம் இல்லை. முதன் மந்திரியின் அந்தரங்க ஒற்றனுக்குத் தெரியாதது என்ன இருக்கிறது? சரி, நீ என்ன செய்யப் போகிறாய்? மாதோட்டத்துக்கு என்னுடன் வரப் போகிறாயா?" என்று கேட்டார்.

"இல்லை, ஐயா! முதன் மந்திரி எனக்கு இட்ட இன்னும் ஒரு வேலை நான் செய்ய வேண்டியிருக்கிறது...."

"அது என்ன, அப்பா?"

ஆழ்வார்க்கடியான் சற்றுத் தூரத்தில் ஊமை ராணியும் பூங்குழலியும் நின்ற இடத்தை நோக்கினான்.

"அந்தப் பெண்களைப் பற்றிய விஷ




யமா?'' என்றார் சேநாதிபதி.

''அவர்களில் ஒருவரைப் பற்றியது தான். இலங்கையில் இத்தகைய ஊமை ஸ்திரீ ஒருத்தியைப் பார்க்க நேர்ந்தால் அவளை எப்படியாவது தஞ்சாவூருக்கு அழைத்து வரும்படி முதன் மந்திரி கட்டளையிட்டிருக்கிறார்.''

''நல்ல வேலை உனக்குக் கொடுத்தார். அதைக் காட்டிலும் இலங்கைக் கடல்களில் அடிக்கும் புயற் காற்றுகளில் ஒன்றைப் பிடித்துக் கொண்டு வரும்படி உனக்குச் சொல்லியிருக்கலாம். அந்த ஊமை ஸ்திரீயைப் பிடித்துக் கொண்டு போவது அவ்வளவு சுலபமாயிருக்கும். அவள் யாரோ தெரியவில்லை. நம் இளவரசரிடம் மிக்க அபிமானம் வைத்திருக்கிறாள். உனக்கு ஏதாவது அவளைப் பற்றித் தெரியுமா?''

''அவள் ஊமை என்பதும் பிறவிச் செவிடு என்பதும் தெரியும். அவளை அழைத்துச் 'செல்வதைக் காட்டிலும் புயற் காற்றைக் கூண்டில் அடைத்துக் கொண்டு போவது சுலபம் என்றும் தெரியும். ஆயினும் என் எஜமானர் சொல்லியிருக்கிறபடியால் ஒரு பிரயத்தனம் செய்து பார்ப்பேன்.''

''இந்த ஓடக்காரப் பெண்ணுக்கும் அவளுக்கும் கூட சிநேகம் போலிருக்கிறது. இரண்டு பேரும் ஜாடைகளினால் பேசிக் கொள்வதைப் பார்! அந்தப் பெண்ணை இங்கே கூப்பிடு! அவளுக்கு ஓர் எச்சரிக்கை செய்ய வேண்டும்!.....''

ஆழ்வார்க்கடியான் அந்தப் பெண்களின் அருகில் சென்று பூங்குழலியிடம் சேநாதிபதி அழைப்பதைக் கூறினான். பூங்குழலி ஊமை ராணியை விட்டுப் பிரிந்து சேநாதிபதியை அணுகினாள்.

''இதோ பார், பெண்ணே! நீ வெகு புத்திசாலி! நல்ல சமயத்தில் வந்து முக்கியமான செய்தி சொன்னாய். சோழ குலத்துக்குப் பெரிய உதவி செய்தாய். இதை நான் என்றும் மறக்க மாட்டேன். தக்க சமயத்தில் தகுந்த பரிசில் கொடுப்பேன்!'' என்றார்.

பூங்குழலி ''வந்தனம், ஐயா! எனக்குப் பரிசில் எதுவும் தேவையில்லை'' என்று பணிவுடன் சொன்னாள்.

''தேவையில்லை என்றால் யார் விடுகிறார்கள்? இந்தக் குழப்பமெல்லாம் கொஞ்சம் அடங்கட்டும். பிறகு, பிறகு.... சோழ நாட்டுச் சைன்யத்தில் வீராதி வீரனைப் பார்த்து உனக்குத் திருமணம் செய்து வைக்கிறேன். உனக்கு வாய்க்கின்ற கணவன் அற்ப சொற்பமானவனாய் இருந்தால் போதாது. பீமசேனனாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவனைக் கண்ணிலே விரலைக் கொடுத்து ஆட்டி வைத்து விடமாட்டாயா?'' என்று சேநாதிபதி கூறிப் புன்னகை புரிந்தார்.

பூங்குழலி தரையைப் பார்த்தபடி நின்றாள். அவள் உள்ளத்தில் கோபம்

பொங்கியது. ஆனால் அதை அச்சமயம் காட்டிக் கொள்ள விரும்பவில்லை. இந்த முரட்டுக் கிழவரிடம் சண்டை பிடிப்பதில் பயன் என்ன? கோபத்தை அடக்கிக் கொள்ள முயன்றாள்.

"ஆனால் ஒரு விஷயத்தை மட்டும் ஞாபகம் வைத்துக் கொள்! இளவரசருக்கு ஏதோ உதவி செய்து விட்டபடியால், அவர் பேரில் பாத்தியதை கொண்டாடலாம் என்று எண்ணாதே! கடலில் வலை போட்டு மீன் பிடிப்பதோடு நிறுத்திக் கொள்! இளவரசரை வலை போட்டுப் பிடிக்கலாம் என்று ஆசைப்படாதே! ஜாக்கிரதை பெண்ணே! இனி அவர் அருகில் நெருங்கினாலும் உனக்கு ஆபத்து வரும்!" என்றார் சேநாதிபதி. அவருடைய குரல் அப்போது மிகக் கடுமையாக இருந்தது. அவருடைய ஒவ்வொரு வார்த்தையும் காய்ச்சிய ஈயத் துளியை விடுவதுபோல் பூங்குழலியின் காதில் விழுந்தது.

அந்தக் கிழவனுக்குப் பதிலுக்குப் பதில் காரசாரமான வார்த்தைகளைச் சொல்ல வேண்டும் என்று பூங்குழலி விரும்பினாள். ஆனால் பேச இயலவில்லை. தொண்டையை அடைத்தது. காதில் விழுந்த காய்ச்சிய ஈயத் துளிகள் கண் வழியாக வெளி வந்தன போல் வெப்பமான கண்ணீர்த் துளிகள் தோன்றிக் கண்களை எரியச் செய்தன.



ணிந்த தலை நிமிராமல் பூங்குழலி திரும்பினாள். கடற்கரைக்கு எதிர்ப் பக்கம் நோக்கி நடந்தாள். நடை மெதுவாக ஆரம்பமாயிற்று. வர வர வேகம் அதிகரித்தது. ஊமை ராணி இருந்த திசையை ஒரு கணம் கடைக்கண்ணால் பார்த்தாள். அவள் அருகில் ஆழ்வார்க்கடியான் நின்று ஏதோ அவளிடம் தெரிவிக்க முயன்று கொண்டிருப்பதைக் கண்டாள். மனிதர்கள் உள்ள இடத்திலேயே தான் இருக்கக் கூடாது என்ற எண்ணம் அவளுக்குத் தோன்றியது. மனிதக் குரலையே கேட்கப் பிடிக்கவில்லை. ஆ! மனிதர்கள் எத்தனை கொடூரமானவர்கள்? எதற்காக இவ்வளவு குரூரமான சொற்களைப் பேசுகிறார்கள்? எல்லாரும் ஊமைகளாகவே இருந்து விட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்?

சிறிது தூரம் காட்டில் புகுந்து சென்ற பிறகு தொண்டைமானாற்றின் கரையை அடைந்தாள். அந்தக் கரையோடு உள் நாட்டை நோக்கி நடந்தாள். அவளுடைய படகை விட்டிருந்த இடத்தைக் குறி வைத்து நடந்தாள். ஆம்; சீக்கிரம் அந்தப் படகைப் போய்ச் சேர வேண்டும். படகில் ஏறிக் கொள்ள வேண்டும். தன்னந்தனியாகக் கடலில் செல்ல வேண்டும். மனிதர்களுடைய குரல் காதில் விழ முடியாத நடுக் கடலுக்கே போய் விட வேண்டும். துடுப்பைச் சும்மா வைத்து விட வேண்டும். அலைகளில் மொத்துண்டு படகு மிதந்து மிதந்து போக வேண்டும். தானும் அதில் போய்க் கொண்டிருக்க வேண்டும். எல்லையில்லாத கடலில் முடிவில்லாமல் போய்க் கொண்டிருக்க வேண்டும். அப்போதுதான் அலைபட்ட தன் உள்ளம் அமைதி பெறும். சேநாதிபதியின் வார்த்தைகளினால் நொந்த உள்ளத்தின் வேதனை தீரும். ஆத்திரம் தணிந்து ஆறுதல் உண்டாகும். அந்தப் பொல்லாத கிழவன் என்ன சொன்னான்! "வலை போட்டுக் கடலில் மீன் பிடிப்பதோடு நிறுத்திக் கொள்! இளவரசருக்கு வலை போடாதே!" என்றான். நானா இளவரசருக்கு வலை போடுகிறேன்! சீச்சீ! அந்தக் கிழவனின் புத்தி போன போக்கைப் பார்!... ஆம்; தரையில் வாழும் மனிதர்களைக் காட்டிலும் கடலில் வாழும் மீன்கள் எவ்வளவோ நல்ல ஜந்துக்கள். அவை இப்படியெல்லாம் கொடூரமாகப் பேசுவதில்லை. ஆழ் கடலில் நீந்தியும் மிதந்தும் எவ்வளவு ஆனந்தமாகக் காலங் கழிக்கின்றன! அவற்றுக்குக் கவலை ஏது? துயரம் ஏது? ஆகா! நான் கடலில் வாழும் மீனாகப் பிறந்திருக்கக் கூடாதா? நானும் மீனாகப் பிறந்து, இளவரசரும் மீனாகப் பிறந்திருக்கக் கூடாதா? அப்படிப் பிறந்திருந்தால், இந்த உலகத்தின் துயரங்கள், துவேஷங்கள், ஆசாபாசங்கள், கோப தாபங்கள், — இவற்றில் அகப்பட்டுக் கொள்ளாமல் சதா சர்வ காலமும் ஆழ் கடலில் நீந்தி நீந்திப் போய்க் கொண்டிருக்கலாம் அல்லவா? அப்

## பாசமுடன் படைக்குது பாண்ட்ஸ்

# POND'S




உங்கள் பாப்பாவுக்கு—பாண்ட்ஸ் பாசப் பெருக்கு
ஒப்பில்லா உருவம் எடுத்து விளையாட வந்திருக்கு:
கொஞ்சுமழகு பொம்மைக் கரடி வடிவிலே
பாண்ட்ஸ் ஸ்பெஷல் பேபி பவுடர், ஸ்பெஷல்
பேபி சோப். இதயத்துப் பாச மலர்கள் இரண்டு:
பாண்ட்ஸ் கஜர்த் தரம் உரைக்கும்
படைப்புகள்—அத்தனையும் தூய்மை, முத்தான
முழுமை. உங்கள் குஞ்சுப் பாப்பாவின்
மழலைக்கு மழலை பேசி பிஞ்சுடலிலே
கொஞ்சி விளையாடும் மென்மை
நாளெல்லாம்—முத்தமாரி பொழியத்
திகட்டாத பூமென்மை. பூரணமாய்
நம்புவீர்: பூப்போல மேனி தழுவி
உங்கள் பாப்பாவைக்
காப்பது பாண்ட்ஸ்.

**பாசத்தால் அரவணைப்பீர் உங்கள் பாப்பாவை**

**POND'S**

**பாண்ட்ஸ் ஸ்பெஷல் பேபி பவுடர் மற்றும் சோப்**

Creative Unit 6982 Tam.







ஆயிரம் மலர்களின் மயக்கும் மென்மை.
மனதைக் கவரும் மணங்கள். Top 3. Fantasy. Gulistan.
தரமான ஊதுவத்திகள். அளிப்பவர்கள் பத்மினி.

எழுந்தது...வேர்க்குருவுக்கு
ஒரு புத்தம்புது எதிரி.
ஷவர் டு ஷவர்




# இனி, வெய்யிலும் கானலும் இனிய நண்பர்கள் உமக்கு.

எந்தப் பவுடரிலும் நீங்கள் கண்டிராத வன்மையோடு வேர்க்குருவை விரட்டுகிறது புதிய ஷவர் டு ஷவர். இதிலுள்ள சிறப்பான மருந்துத் திறன், அரிப்பு நமைச்சல்களை நொடியில் போக்கி ஆறுதலளிக்கிறது. அதே வேகத்தில், வேர்க்குரு பிரச்சினையையே தீர்க்கிறது விருக்கென. ஷவர் டு ஷவர் மூலமாக உங்கள் குடும்பத்தினர் அனைவருக்கும் குன்றாத குளுமை, உலர்வான சுக வசதி, சௌகரியம்—நாள் முழுதும், கோடைகால முழுதும். தூவிக் கொள்வீர் இன்றே துளியளவு. உலாச் செல்வீர் வெளியே, குளிர்காய்வீர் சூரிய ஒளியின் சுகமான கட்டிலே.


உயர்ந்த செயல்திறன்


துரித நிவாரணம்.



ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

LINTAS SSP 5 2416 TM

போது தன்னையும் இளவரசரையும் பிரிப்பதற்கோ, வஞ்சகம் செய்வதற்கோ, விஷமமாகப் பேசுவதற்கோ யாரும் இருக்க மாட்டார்கள் அல்லவா?.... இல்லை, இல்லை! அதுவும் நிச்சயமில்லை. அங்கேயும் இந்தப் பொல்லாத மனிதர்கள் வந்து வலை போட்டுப் பிடித்துக் கொண்டு போகப் பார்ப்பார்கள்! இரண்டு மீன்களில் ஒன்றை மட்டும் கொண்டு போனாலும் போவார்கள்! பாதகர்கள்!......



ங்குழலியின் மனத்தில் பொங்கிய ஆத்திரம் அவளுடைய கால்களுக்கு அளவில்லாத விரைவைக் கொடுத்தது. சூரியன் உச்சி வானுக்கு வந்த சமயம் அவள் படகை விட்டிருந்த இடத்தை அடைந்து விட்டாள். நல்ல வேளை; படகு விட்டிருந்த இடத்தில் கட்டிப் போட்டபடியே இருந்தது. அவளுடைய ஆருயிர்த் தோழி அந்தப் படகுதான். அவளுடைய அடைக்கல ஸ்தானம் அந்தப் படகுதான். துன்பமும் துரோகமும் சூழ்ந்த இந்தப் பொல்லாத உலகத்தில் தனக்கு அமைதியும் ஆனந்தமும் அளிப்பது அந்தச் சாண் அகலத்துப் படகுதான். அதை யாரும் அடித்துக் கொண்டு போகாமல் விட்டு வைத்தது பெரிய காரியம். இனி எது எப்படியாவது போகட்டும். இளவரசரை அந்தக் கிழச் சேநாதிபதியே காவல் புரியட்டும். கொடும்பாளூர் வீட்டுப் பெண்ணையே அவர் கழுத்தில் கட்டி விடட்டும். அதனால் எனக்கு என்ன? என் படகு இருக்கிறது; துடுப்பு இருக்கிறது; கையில் வலிவு இருக்கிறது; விசாலமான கடலும் இருக்கிறது. சமுத்திர ராஜனே! உன் அருமைப் புதல்வியை வேறு யார் கைவிட்டாலும் நீ கைவிடமாட்டாய் அல்லவா? ''சமுத்திரகுமாரி'' என்று இளவரசர் திருவாயினால் கூறியதைப் பொய்யாக்க மாட்டாய் அல்லவா?

பூங்குழலி படகில் ஏறிக் கொண்டாள். கடலை நோக்கிப் படகைச் செலுத்தினாள். நதியின் ஓட்டத்தோடு சென்றபடியால் சீக்கிரத்திலேயே தொண்டைமானாற்றின் முகத்துவாரத்தை அடைந்து விட்டாள். பின்னர் கடலில் படகைச் செலுத்தினாள். சிறிது நேரத்துக்கெல்லாம் சுழிக் காற்று அடிக்கப் போகிறது என்று அவளுக்குத் தெரிந்துபோயிற்று. சுழிக் காற்றின் முன் அறிகுறிகளை அவள் நன்கு அறிந்திருந்தாள். முதல் நாள் இரவு சந்திரனைச் சுற்றிச் சாம்பல் நிற வட்டம் காணப்பட்டது. இன்றைக்குப் பகலெல்லாம் ஒரே புழுக்கமாயிருந்தது. மரங்களில் இலை அசையவில்லை. அதோ தென்மேற்கு மூலையில் கரிய மேகத் திட்டுக்கள் கிளம்பிவிட்டன. சீக்கிரத்தில் சுழிக் காற்று அடிக்கப் போவது நிச்சயம். கடலின் கொந்தளிப்பு அற்புதக் காட்சியாயிருக்கும். ஆனால் சுழிக் காற்று அடிக்கும்போது கடலில் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது. பூதத் தீவுக்குப் போய்த் தங்கியிருப்பது நல்லது. அங்கே தங்கியிருந்தால் சுழிக் காற்றினால் கடலிலே உண்டாகும் அல்லோலகல்லோலத்தை நன்றாய்ப் பார்த்துக் களிக்கலாம். காற்று அடித்து விட்டுப் போன பிறகு, கடலிலும் கொந்தளிப்புச் சிறிது அடங்கிய பிறகு, படகைக் கடலில் செலுத்திக் கொண்டு கோடிக்கரைக்குப் போகலாம். இப்போது என்ன அவசரம்? கோடிக்கரைக்கு இப்போது அந்த மரக்கலம் அநேகமாகப் போயிருக்கும். நல்லவேளை! சுழிக் காற்றில் அது அகப்பட்டுக் கொண்டிராது. இளவரசர் இத்தனை நேரம் பத்திரமாகப் போய் அங்கே இறங்கியிருப்பார். அல்லது ஒருவேளை மாமல்லபுரத்துக்கே போயிருந்தாலும் போயிருப்பார். எங்கே போயிருந்தால் நமக்கு என்ன? சுழிக் காற்றில் அகப்பட்டுக்கொண்டிருக்கமாட்டார். அந்த வரைக்கும் திருப்தி அடையலாம்.



ழிக் காற்று தொடங்குவதற்கு முன்னால் அடியோடு காற்று நின்று போயிருந்தபடியால் மரக்கலங்கள் பாய் விரித்திருந்தும் கடலில் போக முடியவில்லை என்பது பூங்குழலிக்குத் தெரியாது. ஆகையால் இத்தனை நேரம் அக்கரை



போய்ச் சேர்ந்திருக்கும் என்றே நினைத்தாள். சேநாதிபதி "இளவரசருக்கு வலை போடாதே!" என்று சொன்னது அடிக்கடி அவளுடைய மனத்தில் தோன்றித் துன்புறுத்திக் கொண்டிருந்தது. ஆகையால், கோடிக்கரைக்குத் தானும் உடனே போக வேண்டாம் என்று எண்ணினாள். பூதத் தீவிலே தங்கியிருந்து, சுழிக்காற்றின் அட்டகாசங்களை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பிறகு சாவகாசமாகப் புறப்படத் தீர்மானித்தாள்.

தொண்டைமானாற்றின் முகத்துவாரத்திலிருந்து பூதத்தீவு அதிக தூரத்தில் இல்லை. ஆகையால் புறப்பட்ட ஒரு நாழிகைநேரத்துக்குள் அங்கேபோய்ச் சேர்ந்து விட்டாள்.

பூங்குழலி பூதத்தீவைச் சேர்ந்ததற்கும் சுழிக்காற்று அடிக்கத் தொடங்கிய



தற்கும் சரியாயிருந்தது.

படகைக் கரையில் ஏற்றிக் குப்புறக் கவிழ்த்துப் பத்திரமாய்க் கட்டிப் போட்டுவிட்டுப் பூங்குழலி அத்தீவில் இருந்த ஒரு சிறிய புத்த ஸ்தூபத்தை அடைந்தாள். முதலில் சற்று நேரம் அதன் அடிவாரத்துக் குகை அறையில் காற்றிலும் மழையிலும் அடிபடாதிருந்து பார்த்தாள். அதிகநேரம் அவளால் அப்படி இருக்க முடியவில்லை. வாயு பகவானின் கோலாகலத் திருவிளையாடல்களைப் பார்க்கும் ஆசை உண்டாயிற்று. குகையிலிருந்து வெளிவந்து படிக்கட்டில் ஏறி ஸ்தூபத்தின் உச்சியை அடைந்தாள். அப்போது சுற்றுப்புறத்துச் சூழ்நிலை அவள் உள்ளத்தின் நிலைக்கு ஒத்ததாக இருந்தது. பூதத்தீவில் ஓங்கி வளர்ந்திருந்த நூற்றுக்கணக்கான தென்னை மரங்கள் தலைவிரி கோலமாக ஊழிக்காலத்தில் சம்ஹார மூர்த்தியைச் சுற்றி நின்று பூத கணங்கள் ஆடுவது போல் ஆடின. கடல் அலைகள் அத்தென்னை மரங்களின் உயரம் சில சமயம் எழும்பி இமய மலையின் பனிச் சிகரங்களைப் போல் ஒரு விநாடி காட்சி அளித்து மறுவிநாடி



நூறு கோடி நுரைத் துளிகளாகச் சிதறி விழுந்தன. சுழன்று சுழன்று அடித்த காற்றின் சத்தமும் அக்காற்றில் சுழன்று ஆடிய மரக் கிளைகளின் சத்தமும் அலைகளின் பேரொலியும் இடையிடையே கேட்ட இடி முழக்கமும் சேர்ந்து திக்குத் திகாந்தங்கள் எல்லாம் இடிந்து தகர்ந்து விழுகின்றன என்று எண்ணச் செய்தன. வானத்தை வெட்டிப் பிளப்பது போல் அவ்வப்போது தோன்றிக் கப்பும் கிளையும் விட்டுப் படர்ந்து ஓடி மறைந்த மின்னல்கள் ஒரு வினாடி நேரம் கொந்தளித்த அலைகடலையும், பேயாட்டம் ஆடிய மரங்களையும், வெளிச்சம் போட்டுக் காட்டிவிட்டு மறுவினாடி கன்னங்கரிய காரிருளில் ஆழச் செய்தன.

வ்வளவு அல்லோல கல்லோலங்களையும் பார்த்துக் கொண்டு பூங்குழலி வெகு நேரம் நின்றாள். அவள் உடம்பு காற்றில் ஆடிய மரங்களைப் போல் ஆடியது. அவள் கூந்தல் அவிழ்ந்து காற்றில் பறந்தது. மழை அவள் உடலை நனைத்தது. இடி முழக்கம் அவள் செவிகளைப் பிளந்தது. மின்வெட்டு அவள் கண்களைப் பறித்தது. இதையெல்லாம் அவள் பொருட்படுத்தவேயில்லை. வெகு நேரம் அக்காற்றிலும் மழையிலும் அவள் நின்றாள். அவள் உள்ளம் வெறி கொண்டு கொந்தளித்தது. தன்னைச் சுற்றிலும் நடைபெறும் அற்புத கோலாகலமெல்லாம் தான் பார்த்துக் களிப்பதற்காகவே நடப்பதாக எண்ணிப் பெருமிதத்துடன் அனுபவித்துக் கொண்டிருந்தாள்.

இடையிடையே அவளுக்கு இளவரசர் அருள்மொழி வர்மரின் நினைவு வந்து கொண்டிருந்தது. அச்சமயம் அவர் கோடிக்கரை சேர்ந்து பத்திரமான இடத்தில் தங்கியிருப்பார் என்று எண்ணினாள். ஒருவேளை தன் பெற்றோர் வீட்டிலே கூடத் தங்கியிருக்கலாம். அல்லது நாகைப்பட்டினம் சென்று அங்கே இராஜ மாளிகையில் தங்கியிருக்கலாம். ஒருவேளை கடலில் கப்பலிலேயே இருந்திருப்பாரோ? இருந்தால்தான் என்ன? அவர் ஏறிச் சென்ற பெரிய மரக்கலத்தை எந்தச் சுழிக் காற்றுத்தான் என்ன செய்துவிடும்? அவரைப் பாதுகாக்க எத்தனையோ பேர் சுற்றிலும் சூழ்ந்திருப்பார்கள். தன்னைப் பற்றி அவர் ஞாபகப்படுத்திக் கொள்ளுவாரா? ‘அந்தப் பேதைப் பூங்குழலி இச்சமயம் எங்கிருக்கிறாளோ?’ என்று எண்ணிக் கொள்வாரா? ஒருநாளும் மாட்டார். அவருடைய சகோதரி அனுப்பிய வந்தியத்தேவனைப் பற்றி நினைத்துக் கொள்வார். கொடும்பாளூர்க் கோமகளைப் பற்றியும் நினைத்துக் கொள்ளலாம். இந்த ஏழைக் கரையர் குலப் பெண்ணை அவருக்கு எங்கே நினைவிருக்கப் போகிறது?

இரவு வெகுநேரம் சுழிக் காற்றின் கோலாகலத்தை அனுபவித்துவிட்டுப் பூங்குழலி ஸ்தூபத்தின் அடிவாரக் குகைக்குச் சென்று கண்ணயர்ந்தாள். தூக்கத்திலும் அவள் அமைதி அடையவில்லை. ஏதேதோ கனவுகள் கண்டு கொண்டிருந்தாள். கடலில் படகில் சென்று வலை வீசுவது போலவும் அதில் இளவரசர் அகப்படுவது போலவும் ஒரு தடவை கனவு கண்டாள். மற்றொரு சமயம் அவளும் இளவரசரும் மீன்களாக மாறிக் கடலில் அருகருகே நீந்திப் போவதாகக் கனவு கண்டாள். ஒவ்வொரு கனவின் போதும் நடுவில் விழித்தெழுந்து "இது என்ன பைத்தியக்காரத்தனம்?" என்று எண்ணி மனத்தைத் தெளிவாக்கிக் கொள்ள முயன்று மறுபடியும் உறங்கினாள்.

பொழுது விடிந்து அவள் நன்றாய் விழித்தெழுந்த போது சுழிக் காற்றின் கோலாகலம் ஒருவாறு அடங்கிவிட்டிருந்தது. இடியில்லை; மின்னல் இல்லை; மழையும் நின்று போயிருந்தது. எழுந்து கடற்கரைக்குச் சென்றாள். நேற்றிரவு போல் அவ்வளவு பெரிய அலைகள் இப்போது கடலில் அடிக்கவில்லை. ஆயினும் கடல் இன்னும் கொந்தளிப்பாகவே இருந்தது. முன்னிரவு சுழிக்காற்று அத்தீவை என்ன பாடுபடுத்திவிட்டது என்பதற்கு அறிகுறியான காட்சிகள் நாலாபக்கமும் காணப்பட்டன. வேருடன் பெயர்ந்து தரையில் விழுந்து கிடந்த மரங்களும், முடிகள் வளைந்து தாழ்ந்திருந்த நெடிய பெரிய மரங்களும் காட்சி அளித்துக் கொண்டிருந்தன.

பூங்குழலி அக்காட்சிகளையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த போது கடலில் சற்றுத் தூரத்தில் ஒரு கட்டு மரம் மிதப்பது போல் தெரிந்தது. அது கடற்கரையோரத்து அலைகளினால் பல தடவை அப்படியும் இப்படியும் அலைப்புண்ட பிறகு கடைசியாகக் கரையில் வந்து ஒதுங்கியது. அப்போதுதான் அதிலே ஒரு மனிதன் இருப்பதைப் பூங்குழலி கவனித்தாள். ஓடிப்போய்ப் பார்த்தாள். கட்டுமரத்தில் கட்டப்பட்டிருந்த அந்த மனிதன் குற்றுயிராயிருந்தான். அவனைக் கட்டு அவிழ்த்துவிட்டு, ஆசுவாசப்படுத்தினாள். அவன் ஈழத்துக் கடற்கரைக் கிராமம் ஒன்றைச் சேர்ந்த வலைஞன். மீன் பிடிக்கப் போன இடத்தில் சுழிக்காற்றில் அகப்பட்டுக் கொண்டதாகக் கூறினான். தன்னுடன் இருந்த தோழனைக் கடல் இரையாக்கிக் கொண்டதாகவும் தான் பிழைத்தது புனர் ஜன்மம் என்றும் தெரிவித்தான். இன்னும் முக்கியமான ஒரு செய்தியையும் அவன் கூறினான்.

''முன்னிரவு நேரத்தில் கடுமையான சுழிக்காற்று அடித்துக் கொஞ்சம் நின்றது போலிருந்தது. எங்களைச் சுற்றிலும் காரிருள் சூழ்ந்திருந்தது. திடீரென்று ஒரு பேரிடி இடித்தது. அப்போது தோன்றிய மின்னல் வெளிச்சத்தில் இரண்டு மரக்கலங்கள் தெரிந்தன. ஒரு மரக்கலம் தீப்பிடித்து எரியத் தொடங்கியது. அந்தப் பயங்கரமான காட்சியைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தோம். அதில் மனிதர்கள் இருந்ததாகவே தெரியவில்லை. சற்றுத் தூரத்தில் இன்னொரு மரக்கலமும் நிற்கக் கண்டோம். அதில் மனிதர்களின் அவசர நடமாட்டமும் தெரிந்தது. பிறகு தீப்பிடித்த கப்பல் கடலில் முழுகிவிட்டது. மற்றொரு மரக்கலம் இருட்டில் மறைந்து விட்டது!'' என்று அம்மனிதன் தட்டுத் தடுமாறிக் கூறினான்.



தைக் கேட்டவுடனே பூங்குழலிக்கு இளவரசரை ஏற்றிச் சென்ற கப்பல் அவற்றில் ஒன்றாயிருக்குமோ என்ற ஐயம் உதித்தது. அப்படி இருக்க முடியாது என்று நிச்சயம் அடைந்தாள். கடலில் எத்தனையோ கப்பல்கள் வந்து கொண்டும் போய்க் கொண்டுமிருக்கும். அதைப் பற்றி நமக்கு என்ன கவலை? ஆனாலும் தீப்பிடித்த கப்பலில் இருந்தவர்களில் சிலர் கடலில் விழுந்திருக்கக் கூடும். இந்தக் கட்டு மரத்து வலைஞனைப் போல் அவர்களில் யாராவது கையில் அகப்பட்டதைப் பிடித்துக் கொண்டு தத்தளிக்கக் கூடும். அவர்களுக்கு ஏன் நாம் உதவி செய்யக் கூடாது? படகில் ஏறிச் சென்று அப்படித் தத்தளிக்கிறவர்களை ஏற்றிக் கொண்டு வந்து ஏன் கரை சேர்க்கக் கூடாது? பின்னே, இந்த ஜன்மம் எதற்காகத்தான் இருக்கிறது?

அவ்வளவுதான்; இந்த எண்ணம் தோன்றியதோ, இல்லையோ, பூங்குழலி படகைக் கட்டவிழ்த்து நிமிர்த்திக் கடலில் தள்ளிவிட்டாள். தானும் ஏறிக் கொண்டாள். அவளுடைய இரும்புக் கரங்களின் பலம் முழுவதையும் உபயோகித்துத் துடுப்பை வலித்தாள். கரையில் வந்து மோதிய அலைகளைத் தாண்டி அப்பால் போகும் வரையில் மிகக் கடினமான வேலையாயிருந்தது. அப்புறம் அவ்வளவு கஷ்டமாக இல்லை. வழக்கம் போல்



அருள்வாக்கு

ஆயாஸத்துக்கு எதிர்ப்பதம் அநாயாஸம். 'லைட்'டாக இருப்பது என்கிறார்களே, அதுதான் அநாயாஸம். ஆயாஸம் இல்லாமல், அதாவது எதையுமே ஒரு கனமையாக எடுத்துக் கொண்டு கஷ்டப்படாமல், ''லைட்''டாக, லேசாக இருப்பது அநாயாஸம். எப்போதுபார்த்தாலும் 'உர்' ரென்று இருந்து கொண்டு, வாழ்க்கையில் தனக்கு எல்லாம் கஷ்டம் என்று புலம்பிக் கொண்டு, நொந்து கொண்டு இல்லாமல், எதிலும் கடுமையாகச் செய்யாமல், நிம்மதியோடு லேசாகச் செய்ய வேண்டும். இப்படிச் செய்வதாலேயே ஆயாஸப்பட்டுக் கொண்டு செய்வதை விடப் பல மடங்கு வேலை செய்து விடலாம். பதட்டமில்லாமல் (பதற்றமில்லாமல்) பண்ணுவது அநாயாஸம். படபடவென்று செய்தால் நம்மையும் நெரித்துக் கொண்டு மற்றவர்களையும்நெரிப்பதுதான் மிஞ்சுமே தவிர காரியம் சரியாக ஆகாது. அநாயாஸம் ஒரு பெரிய **Virtue** (குணசீலம்). அலட்டிக் கொள்ளாமல் இருக்கிற குணம் அநாயாஸம். தானும் சிரமப்படாமல், மற்றவர்களையும் சிரமப்படுத்திக் கொண்டிராமல் இருப்பது அநாயாஸம். அநேக கர்மானுஷ்டானங்களில் உடம்பால் சிரமப்படத்தான் வேண்டியிருக்கும். சிராத்தம் செய்வதென்றால் மத்யான்னம் இரண்டு மணி, மூன்று மணி வரை பட்டினி கிடக்கத்தான் வேண்டும். ஒரு யாகம் என்றால், அதில் இருக்கிற சரீர சிரமம் கொஞ்சநஞ்சமில்லை. ஆகையால், இங்கே சிரமப்படக்கூடாது என்பது மனஸினால் சிரமப்படாமலிருப்பதைத்தான் குறிக்கும். எந்தக் காரியமானாலும் விக்கினங்கள் ஏதாவது வரத்தான் செய்யும். இதைப் பார்த்து மனஸை **Strain** பண்ணிக் கொள்ளக் கூடாது. எல்லாம் பகவான் திட்டப்படி நடக்கிறது என்று மனஸிலே, பாரமில்லாமல் இருக்க வேண்டும். ஸங்கீத வித்துவான் அநாயாஸமாக தாரஸ்தாயி பிடித்தார் என்றால் என்ன அர்த்தம்? சிரம ஸாத்யமானதையே ஸுலபமாக்கிக் கொண்டு விட்டார் என்றுதானே அர்த்தம்? சிரமமான வாழ்க்கையை அப்படிப் பண்ணிக் கொள்ள வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

சர்வ சாதாரணமாக அவளுடைய கரங்கள் துடுப்பை வலித்தன. படகு உல்லாசமாக ஆடிக் கொண்டு மெள்ள மெள்ள நகர்ந்து சென்றது.

பூங்குழலியின் உள்ளத்தில் குதூகலம் பொங்கியது. அவள் படகிலே வழக்கமாகப் பாடும் பழைய கீதம் தானாகவே புதிய உருவம் கொண்டது. அலைகளின் இரைச்சலை அடக்கிக் கொண்டு அந்தக் கீதம் அவளுடைய கம்பீரமான இனிய குரல் வழியாக வெளி வந்து நாற்றிசையும் பரவியது: —

''அலைகடல் கொந் தளிக்கையிலே
அகக்கடல்தான் களிப்பதுமேன்?

நிலமகளும் துடிக்கையிலே
நெஞ்சகந்தான் துள்ளுவதேன்?

இடி இடித்து எண்திசையும்
வெடிபடும் அவ்வேளையிலே

நடன கலை வல்லவர்போல்
நாட்டியந்தான் ஆடுவதேன்?''

பாய்மரக் கட்டையைப் பிடித்துக் கொண்ட இளவரசரும் வந்தியத்தேவனும் அலை கடலில் மொத்துண்டு மொத்துண்டு மிதந்து கொண்டிருந்தார்கள். அன்று ஓர் இரவுதான் அவர்கள் அவ்வாறு கடலில் மிதந்தார்கள். ஆனால் வந்தியத்தேவனுக்கு அது எத்தனையோ யுகங்கள் எனத் தோன்றியது. அவன் சீக்கிரத்திலேயே நிராசை அடைந்து விட்டான்; பிழைத்துக் கரையேறுவோம் என்ற நம்பிக்கையை அடியோடு இழந்து விட்டான். ஒவ்வொரு தடவை அலை உச்சிக்கு அவன் போய்க் கீழே வந்தபோதும், ''இத்துடன் செத்தேன்'' என்று எண்ணிக் கொண்டான். மறுபடியும் உயிரும் உணர்வும் இருப்பதைக் கண்டு வியந்தான். —

அடிக்கடி இளவரசரைப் பார்த்து, ''என்னுடைய அவசர புத்தியினால் தங்களையும் இந்த ஆபத்துக்கு உள்ளாக்கினேனே?'' என்று புலம்பினான்.

இளவரசர் அவனுக்கு ஆறுதல் கூறித் தைரியம் ஊட்டி வந்தார். "மூன்று நாள் நாலு நாள் வரையில் கடலில் இதுமாதிரி மிதந்து பிழைத்து வந்தவர்கள் உண்டு" என்று அடிக்கடி சொல்லி வந்தார். "நாம் கடலில் விழுந்து எத்தனை நாட்கள் ஆயின?" என்று வந்தியத்தேவன் கேட்டான். "இன்னும் ஒரு ராத்திரிகூட ஆகவில்லையே?" என்றார் இளவரசர். "பொய்! பொய்! பல நாட்கள் ஆகியிருக்க வேண்டும்" என்றான் வந்தியத்தேவன்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவனுக்கு இன்னொரு கஷ்டம் ஏற்பட்டது. தொண்டை வறண்டு போய்த் தாகம் எடுத்தது. தண்ணீரிலேயே மிதந்து கொண்டிருந்தான்; ஆனால் தாகத்துக்குக் குடிக்கத் தண்ணீர் இல்லை. இது பெரிய சித்திரவதையாயிருந்தது. இளவரசரிடம்கூறினான். "கொஞ்சம் பொறுமையாயிரு! சீக்கிரம் பொழுது விடியும்! எங்கேயாவது கரையிலே போய் ஒதுங்குவோம்!" என்றார் இளவரசர். சிறிது நேரம் பொறுத்துப் பார்த்தான்; முடியவில்லை. "ஐயா! என்னால் இந்தச் சித்திரவதையைப் பொறுக்க முடியாது. கட்டை அவிழ்த்து விடுங்கள்! கடலில் முழுகிச் சாகிறேன்!" என்றான். இளவரசர் மீண்டும் தைரியம் கூற முயன்றார். ஆனால் பலிக்கவில்லை. வந்தியத்தேவனுக்கு வெறி மூண்டது. தன்னுடைய கட்டுக்களைத் தானே அவிழ்த்துக் கொள்ள முயன்றான். இளவரசர் அதைப் பார்த்தார். அருகில் நெருங்கிச் சென்று அவனுடைய தலையில் ஓங்கி இரண்டு அறை அறைந்தார். வந்தியத்தேவன் உணர்வை இழந்தான்!

அவன் மறுபடி உணர்வு பெற்ற போது பொழுது விடிந்து வெளிச்சமாயிருப்பதைக் கண்டான். அலைகளின் ஆரவாரமும் சிறிது அடங்கியிருந்தது. சூரியன் எங்கேயோ உதயமாகியிருக்கவேண்டும். ஆனால்எங்கே உதயமாகியிருக்கிறது என்று பார்க்க முடியவில்லை.

இளவரசர் அவனை அன்புடன் நோக்கி, "தோழா! சமீபத்தில் எங்கேயோ கரை இருக்க வேண்டும். தென்னை மரம் ஒன்றின் உச்சியைச் சற்று முன் பார்த்தேன். இன்னும் கொஞ்சம் பொறுமையாயிரு!" என்று சொன்னார்.

"இளவரசே! என்னைக் கைவிட்டு விடுங்கள்! தாங்கள் எப்படியாவது தப்பிப் பிழையுங்கள்!" என்றான் வந்தியத்தேவன்.

"வேண்டாம்! அதைரியப்படாதே! உன்னை அப்படி நான் விட்டுவிட மாட்டேன்!... ஆகா! அது என்ன! யாரோ பாடுகிற குரல் போல் தொனிக்கிறதே!" என்றார் இளவரசர்.

ஆம்; அப்போது அவர்களுடைய காதில் பூங்குழலி படகிலிருந்து பாடிய பாட்டுத்தான் கேட்டது.

**"அலைகடல் கொந் தளிக்கையிலே**
**அகக்கடல் தான் களிப்பதுமேன்?"**

என்ற கீதம் அவர்களுடைய காதில் அபய கீதமாகத் தொனித்தது. உடற்சோர்வும் மனச்சோர்வும் உற்று முக்கால் பிராணனை இழந்திருந்த வந்தியத்தேவனுக்குக் கூட அந்தக் கீதம் புத்துயிர் அளித்து உற்சாகம் ஊட்டியது.

"இளவரசே! பூங்குழலியின் குரல்தான் அது! படகு ஓட்டிக் கொண்டு வருகிறாள். நாம் பிழைத்துப் போனோம்!" என்று சொன்னான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் படகு அவர்கள் கண்ணுக்குத் தென்பட்டது. நெருங்கி நெருங்கி அருகில் வந்தது. பூங்குழலி "இது உண்மையில் நடப்பதுதானா?" என்று சந்தேகித்துச் செயலிழந்து நின்றாள். இளவரசர் வந்தியத்தேவனைக் கட்டு அவிழ்த்து விட்டார். முதலில் தாம் படகிலே தாவி ஏறிக் கொண்டார். பின்னர் வந்தியத்தேவனையும் ஏற்றி விட்டார். பூங்குழலி கையில் பிடித்த துடுப்புடனே சித்திரப்பாவையைப்போல் செயலற்று நின்றாள்.

(தொடரும்)

---

# (இரண்டாம் பாகம் முற்றியது)

---

# பார்கவி

வெள்ளியூரிலிருந்து வந்திருந்த எனது நண்பன் சுதாகருக்கு மகாபலிபுரத்தைச் சுற்றிக் காண்பித்து விட்டு, ''சரி, கிளம்புவோம்... அதோ பஸ்கூட ரெடியாக இருக்கு'' என்று சொல்லிக் கொண்டே புறப்பட்ட எங்களை, ''சார்...'' என்ற குரல் தடுத்து நிறுத்தியது.

''என்னப்பா... இது புதுமாதிரியான பிச்சையாக இருக்கிறது. நாங்கள் இந்த ஊர்க்காரர்கள்தான். இங்கேயும் அடிக்கடி வருபவர்கள்தான்.''

நண்பன் சுதாகரின் சமயோசிதப் பேச்சை எண்ணி வியந்தேன்.

ஆனால், வந்தவன், ஆயிரம் சுதாகரைப் பார்த்திருப்பான்போல் இருந்தது. சுதாகரின் சமயோசிதப் பேச்சைக் கேட்டு அசந்து போய்விடவில்லை!

''சார், நான் ஒரு கைடு. என்னடா சட்டைப் பையில் 'பாட்ஜ்' ஒன்றும் குத்திக் கொள்ளவில்லை என்று பார்க்கிறீர்களா? அப்ரூவ்ட் கைடு என்று சொல்கிறார்களே, அவர்களைவிட நாங்கள் எவ்வளவோ தேவலை.

இரண்டு நாட்களுக்கு முன்பு ஒருநாள் ஒரு வயதான மனிதர் இங்கே வந்து, இந்த அழகான பாறையையும், இதில் முக்கோண வடிவத்தில் செதுக்கப்பட்டிருக்கும்,



'பார்கவி' என்ற பெயரையும் பற்றி விளக்கம் கேட்டபோது, அந்த அப்ருவ்ட் கைடு இந்தப் பாறையை உருவாக்கிய நந்தி வர்மனை நரசிம்ம பல்லவன் என்று சொன்னான். அதனால் அந்த முதியவர் அவன் மேல் கடுங்கோபம் கொண்டு —

''உங்களைப் போன்ற அறிவிலிகளால் தான் நம் கலாசாரப் பெருமையே அழிந்து போகிறது. வெளிநாட்டிலிருந்து இப்போதெல்லாம் இங்கே வருபவர்கள் நம் கலாசார வரலாறுகளைப் புத்தகங்களில் ஓரளவு படித்து விட்டுத்தான் வருகிறார்கள். அவர்களை அவ்வளவு சுலபமாக ஏமாற்ற முடியாது. நானும் ஒரு சரித்திரப் பேராசிரியர்தான். இப்போதே உன்னை...'' என்று கூறியதும், அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டான், அந்த கைடு. உடனே, நான், அந்த முதியவரை அணுகு முன்பே அவர் காரில் ஏறிப் போய்விட்டார்.

''இதில் ஒரு பெரிய வேடிக்கை என்னவென்றால், இந்தப் பாறையின் மேல் செதுக்கப்பட்டிருக்கும் 'பார்கவி' என்ற சொல்லின் வரலாறு அவருக்கே கண்டிப்பாகத் தெரிந்திருக்காது. அவரும் அடிக்கடி இங்கே வருகிறார். யார் யாரையோ கேட்டுப் பார்க்கிறார். ஒருவருக்கும் தெரியவில்லை. ஆனால், நானோ அவராக வந்து என்னைக் கேட்கும் வரை சொல்லத் தயாராயில்லை.

இப்பொழுது நண்பன் சுதாகர் அவனை விடுவதாயில்லை. ஒரு பத்து ரூபாய் நோட்டை அவன் கையில் உடனே திணித்தான்.

எனக்கோ மிகவும் ஆச்சரியம்! இந்தப் 'பார்கவி' என்ற சொல்லின் வரலாறு எனக்குத் தெரிந்ததை விடவா இந்த 'கைடு' அறிந்திருக்க முடியும்? எனினும், ஆவலைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டேன்.

கைடு ஆரம்பித்தான்:

தொண்டை மண்டலத்தில் பௌத்த மதம் வெகுவேகமாகப் பரவிவந்த காலம் அது. பல்லவர்கள் பரம்பரையில் வந்த அபராஜிதவர்மன், பௌத்த பிக்ஷுக்களுக்கு ஆதரவு கொடுத்தும், புத்த பிரானின் கொள்கைகளை நாட்டின் எல்லாப் பாகங்களிலும் பரவச் செய்தும் புத்த மதத்தின் பெருமையைப் பறைசாற்றிக் கொண்டிருந்தான்.

தன் குடிமக்கள் அனைவரும் புத்தரின் கொள்கைகளைப் பின்பற்றி நல்வாழ்வு வாழ வேண்டும் என்று நினைத்த அரசர் ஒரே ஒரு விஷயத்தை மட்டும் மறந்து விட்டார்! சாதாரண விஷயமா அது? பேரிடியென அவர் மனத்தைக் கலங்கச் செய்துவிட்ட விஷயம்!

மன்னன் அபராஜித வர்மனின் ஒரே புதல்வன் நந்திவர்மன் கல்வி பயிலும் போதே, தந்தை பரப்பி வந்த புத்தரின் கொள்கைகளுக்கு அடிமையாகி விட்டான்.

உலக வாழ்க்கை அநித்தியமானது என்பதை உணர்ந்த அவன் புத்தபிரானைப் போலவே, ஓர் இரவில், தன் அன்னையையும், தந்தையையும் பிரிந்து துறவி வேடம் பூண்டு வெகு தொலைவில் உள்ள வனத்தினை அடைந்தான்.

மறுநாள் காலையில் செதியறிந்த மன்னன் துவண்டு போனான்! செய்வதறியாது துடித்தான். தனக்குப் பின் நாட்டை ஆள்வதற்கு வாரிசு இல்லாமல் இறந்து போகப் போகிறேனே என்று பெரிதும் துயருற்றான்.

'நந்திவர்மா, சிறுபிள்ளை என்பதை நொடிப் பொழுதில் உணர்த்தி விட்டாயே. புத்தமதத்தின் கொள்கைகளைப் பரப்புவதற்கும், பின்பற்றுவதற்கும் துறவு ஒன்றுதான் வழி என்று எங்ஙனம் முடிவுக்கு வந்தாய்?

— சுஜேன் —

நான் துறவு பூண்டா கொள்கைகளைப் பரப்புகிறேன்? நமக்கு முன் ஆண்ட மன்னர்களெல்லாம் துறவுக் கோலம் கொண்டுதான் கொள்கைகளைப் பரப்ப வேண்டும் என்று சொல்லவில்லையே...'' என்று இரண்டே நாட்களில் நந்திவர்மனின் இருப்பிடத்தைக் கண்டு பிடித்து மகனை அரண்மனைக்குத் திரும்பி வருமாறு வேண்டினான். மகன் மனம் மாறவில்லை.

எல்லா முயற்சிகளிலும் தோல்வியுற்றுச் சோர்ந்து போய் அரண்மனைக்குத் திரும்பிய அபராஜித வர்மன் வேறு வழியின்றி ஓர் அறிவிப்பை விடுத்தான். இளவரசனின் மனத்தை மாற்றுபவர்களுக்கு அளவற்ற பரிசில் கொடுப்பதாகப் பறைசாற்றினான்.

அறிவிப்பு ஒன்றிற்காகவே காத்திருந்தது போல், அடுத்த நாள் அரண்மனையின் நடன நங்கை பார்கவி அரசனின் முன்பு வந்து நின்றாள்.

ஏதோ ஒரு சூழ்நிலையில் இளவரசன் தவக்கோலம் கொள்வதற்கு முன், ஒருநாள் அவன் அழகில் தன்னை மறந்து, தன் நிலையையும் மறந்து, மணந்தால் இளவரசனைத் தான் மணப்பேன் என்று உறுதி பூண்டாள். ஆனால், தன்னால் இளவரசனை எப்படி மணக்க முடியும் என்ற கேள்வியும் அவள் மனத்தில் எழாமல் இல்லை! எனினும், காலத்தின் கோலமும், விதியின் விபரீதமான விளையாட்டும் எதையும் தலைகீழாக மாற்றிவிடும் என உறுதியாக நம்பினாள். நடன கணிகை அல்லவா? காத்திருந்தாள் அமைதியாக!

அரசரின் அறிவிப்பு அளித்த புத்துணர்ச்சியுடன், கால்களில் கொலுசு குலுங்க வந்து நின்றாள்.

'என்ன நீயா? உன்னால்...' என்று திகைத்து நின்ற மன்னனிடம், 'என்னால் நிச்சயமாக முடியும். ஆனால்... எனக்கு வேண்டியது பொன்னும் பொருளுமல்ல... தங்கள் மகனை

என்றோ என் மனத்தில் நாயகனாக வரித்து விட்டேன்... எங்களைப் பிரித்துவிடாதீர்கள்... தங்கள் மகனைத் தங்களிடம் திருப்பிக் கொண்டு சேர்க்காமல், நான் உயிருடன் திரும்பிப் போவதில்லை. இது உறுதி...' —

விக்கித்து நின்ற மன்னனை, அமைச்சர் ஜயவர்மன்தான் தேற்றினார்.

'அரசே, எப்படியும் முதலில் இளவரசர் திரும்பி வரட்டும். நீங்கள் வாக்குக் கொடுத்து விட்டீர்கள், சரி! ஆனால், இளவரசர் மனத்தை யார் அறிவார்? ஒருவேளை இது ஒருதலைப் பட்சக் காதலாகக் கூட இருக்கலாம் அல்லவா...''

''ஹூம்... நீங்கள் சொல்வதும் சரி தான்...'' — கலக்கத்திலிருந்து விடுபட்டான் மன்னன்.

**வி**டியற்காலைப்பொழுதில்வனத்திலிருந்த தன் இருப்பிடத்திற்குப் பக்கத்தில் இருந்த நந்தவனத்தில் அழகிய மலர்களைக் கொய்து கொண்டிருந்த துறவி நந்திவர்மன், திடீரென்று சிறிது தூரத்தில் அபரிமிதமாகப் பூத்திருந்தமல்லிகைமலர்களின்வாசனையால் உந்தப்பட்டுப் பார்வையைத் திருப்பியவன், அங்கே மலர்களை மட்டும்தானா கண்டான்! மலரிடை மதிமுகம் ஒன்றையுமல்லவா கண்டான்!

'பார்கவி... நீ எப்படி இங்கு...?'

'மன்னிக்க வேண்டும்... உங்களுக்கு முன்பே நான் துறவறத்தை மேற்கொண்டு விட்டேன்!'

'சே, சே! உனக்கு இன்னும் சாதிக்க வேண்டியது நிறைய இருக்கிறது. அரண்மனையிலேயே. இதற்குள் ஏன் துறவுக் கோலம்?'

'ஏமாற்றம்தான் காரணம். நான் ஒருவரை நேசித்தேன். கடைசியில் ஏமாற்றமடைந்தேன். அதனால் துறவியாகிவிட்டேன். எனக்கு வேண்டியது இப்பொழுது மனநிம்மதி! நாம் இருவருமே புத்தரின் கொள்கைகளைப் பரப்புவோம்...'

நந்திவர்மன் புத்தரின் கொள்கைகளை மக்களிடையே பரப்பிக் கொண்டிருந்தான். பார்கவியும் நந்திவர்மனுடன் சேர்ந்து தன் பங்கிற்கு அழகான அபிநயங்களின் மூலம் புத்தரின் கொள்கைகளுக்கு உயிரூட்டிக் கொண்டிருந்தாள்.

நல்ல பாம்பைப் போலவே நடந்து கொண்டாள் பார்கவி. கடைசி வரை தன் இருப்பிடத்தைச் சொல்லாமலேயே இளவரசனை அலைக்கழித்தாள்.

'இளவரசே, நீங்கள் புத்த பிரானின் சீடர். பற்றற்ற இளந் துறவி. உங்கள் கொள்கைகளுக்குத் தான் நான் நடனமாடுகிறேன். மற்ற சமயங்களில் நான் நெருப்பு. ஜாக்கிரதை!'— என்று கூட ஒரு சமயம் பேச்சின் போது பொய்க் கோபத்துடன் எச்சரித்தாள்.

ஒன்பது நாட்கள் நந்திவர்மனின் இருப்பிடத்திற்கு ஒழுங்காக வந்தவள், பத்தாவது நாள் வரவில்லை.

வெகு நேரம் காத்திருந்தும், பார்கவி வராததைக் கண்டு பித்தம் தலைக்கேறிய நிலையில், நந்திவர்மனே அவளைத் தேடிப் புறப்பட்டான். கால்கள் சென்று கொண்டே இருந்தன. ஆனால், அவள் இருப்பிடத்தைக் கண்டுபிடிக்க இயலவில்லை.

ஐந்து மணி நேர அலைச்சலுக்குப் பின் சோர்வின் எல்லையில், மயக்கமுறும் நிலையில், பார்கவியின் சலங்கை ஒலி அவன் செவிகளைக் கெட்டியது. ஒலி எழுந்த இடத்தை அடைந்த அவன், அப்படியே தன்னை மறந்து ஆடிக் கொண்டிருந்த பார்கவியின் கால்களில் விழுந்தான்.

பார்கவி சட்டென்று தன் கால்களை இழுத்துக் கொண்டாள்.

பார்கவி, நான் தோற்று விட்டேன். உண்மையை இப்போதுதான் நான் உணர்ந்து கொண்டேன். எல்லா இளவரசர்களும் சித்தார்த்தனாக முடியுமா? பெரியோர் அறிவுரைகளைக் கேட்க மறுத்த நான், இன்று மிகப் பெரிய பாவச் செயல் புரிந்து விட்டேன். இனியும் என்னால் துறவியாக இருக்க முடியாது. அந்த புத்தர் பிரானே, உன் வடிவில் வந்து என்னைச் சோதனை செய்து பார்த்திருக்கிறார். சோதனையில் நான் தோற்று விட்டேன். வா, அரண்மனைக்குப் போகலாம்!

நந்தி வர்மனின் திடீர் மாறுதல் அவளுக்கு வியப்பை அளித்தது. அரசனுக்கு வாக்குக் கொடுத்தபடி தன் கடமையைச் செய்து விட்டதைக் கண்டு மனம் மகிழ்ந்தாள்.

ஆனால் அவள் மகிழ்ச்சி இரண்டு விநாடிகள் கூட நீடிக்கவில்லை. அவள் கண்களிலிருந்து கண்ணீர் பெருகி ஓடியது.

மகனைத் திரும்பப் பெற்று விட்ட மகிழ்ச்சியில் தனக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற மன்னன் இசையா விட்டால், தான் என்ன செய்ய முடியும்? என்ற எண்ணத்தில் எழுந்த கண்ணீரோ!

மகனை, உயிருடன் திரும்பப் பெற்ற அபராஜிதவர்மன் மட்டற்ற மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தான்.

பார்கவி அரண்மனையில் தனி அறையில் வீற்றிருந்தாள். மன்னன் விலையுயர்ந்த ஆடை அணிகலன்களையும், பரிசுப் பொருள்களையும் ஏந்திக் கொண்டு வந்து, பார்கவியின் முன் சமர்ப்பித்தான்.

''நடிகைக்கும் அவங்க அம்மாவுக்கும் என்ன தகராறு?''

''இப்போ புதுசா வந்திருக்கிற ஹீரோவை யார் கல்யாணம் பண்ணிக்கிறதுங்கிறதுலேதான்...''

— எஸ். ராகவேந்திரா.



இந்த நாட்டின் தலையெழுத்தையே மாற்றி எழுதிவிட்ட ஒப்புயர்வற்ற பெண்ணே...' — என்று மன்னன் ஆரம்பித்த மறுகணமே பார்கவி புரிந்து கொண்டாள். மக்கள் குற்ற மிழைக்கும் போது, மன்னனிடம் முறையிட லாம். ஆனால் மன்னனே வாக்குத் தவறும் போது...

'அரசே! நீங்கள் என்ன சொல்லப் போகி றீர்கள் என்று எனக்குத் தெரியும். நான் இளவரசரைச் சந்திப்பதற்கு முன்பு இருந்த பார்கவி அல்ல இப்போது. அவர் மூலம் கேட்டறிந்த புத்தர் வரலாறும், புத்த மதக் கொள்கைகளும் இந்த அநித்தியமான உலக வாழ்வை வெறுக்கச் செய்து விட்டன. இப் பொழுது நான்தான் உண்மையிலேயே துற வியாகி விட்டேன். நான் வருகிறேன்!' — என்று விரக்தியுடன் கூறிவிட்டு வேகமாக வெளியேறினாள் பார்கவி.

அவளுடைய பதிலைக் கேட்டு ஒரு கணம் அசைவற்று நின்றவன் மன்னன் அபராஜி தன் மட்டுமல்ல; அந்தச் சமயத்தில், ஆயிரம் ஆசைகளையும் ஒன்று சேர்த்து பார்கவியின் இதழ்களில் முத்தமிடத் துடித்துக் கொண்டு ஓடிவந்த இளவரசன் நந்திவர்மனும்தான்!

'மகனே கொஞ்சம் நில்... கொஞ்சம் நில்!' என்ற மன்னனின் கூக்குரலையும் பொருட்படுத்தாது உண்மையிலேயே பைத் தியம் பிடித்து ஓடிவிட்டான் நந்திவர்மன்.

எங்கெங்கோ ஓடி அலைந்து, திரிந்து, பார்கவியை காணாது, கடைசியில் இங்கு வந்து இந்தப் பாறையில் முட்டிக் கொண்டு இறந்து போனான். அவன் இறப்பதற்கு முன்பு செதுக்கிய வார்த்தைகள் தான் இந்தப் 'பார்கவி' என்ற சொல்!

வழிகாட்டி நிறுத்தினான்.

''என்ன மூர்த்தி! பார்த்தால் சாதாரண மனிதனாயிருக்கிறான். அடேயப்பா எவ் வளவு பெரிய வரலாறு! நீ என்னவோ, சரித் திரத்திலும், சிற்பக் கலையிலும் அப்படி இப் படி என்கிறாய்...'' — என்று சொல்லிக் கொண்டே என்னை ஒரு மாதிரியாகப் பார்த் தான் நண்பன் சுதாகர்.

''அடப்பாவி! உலகத்தில் பிழைப்பு எப் படியெல்லாம் இருக்கிறது பார்த்தாயா! நான் போன வருடம் என் மனைவியையும், குழந்தை பார்கவியையும் அழைத்துக் கொண்டு இங்கே வந்த போது, கை வெறுமே இல்லாமல், இங்கே பக்கத்தில் உள்ள சிற் பக் கல்லூரியிலிருந்து ஓர் உளியை வாங்கி வந்து வேடிக்கையாகப் 'பார்கவி' என்று செதுக்கி வைத்தேன். இதை வைத்துக் கொண்டு தடி ராஸ்கல் ஒரு பொய்யான சரித்திரக் கதையைச் சொல்லி ஊரை ஏமாற் றிக் கொண்டிருக்கிறான். இதைப் போய் நீயும்...'' — என்று செ.ல்லிக் கொண்டே, அந்த வழிகாட்டியை அறைவதற்காகக் கையை ஓங்கினேன். அதற்குள் அவன் வெகு தூரத்திற்கு அப்பால் ஓடியிருந்தான்! அவனுக்குத்தான், இன்றைய சாப்பாட்டிற் கான பத்து ரூபாய் அப்பொழுதே கிடைத்து விட்டதே!

வாசகர் பங்கு:

# தளபதி திடமதி



## பரிசு ரூ.400

தேர்தல் சூடு பிடிக்கப் பிடிக்க மாறி வரும் அரசியல் சூழ்நிலைகள், சமுதாயப் பிரச்னைகளை வைத்து நமது ஆஸ்தான ஜோக்கர் 'விட்' அடிப்பது, அதிகரித்துவர வேண்டாமா? அவருக்கு உதவுங்கள்! உங்களுக்கும் உதவிக் கொள்ளுங்கள்! முதல் தடவை உங்கள் துணுக்கு பிரசுரமானால் பரிசு ரூ. 25/-. அடுத்தடுத்துப் பல இதழ்களில் ஒருவரே எழுதிய சில துணுக்குகள் இடம் பெற்றால் ஒவ்வொரு தடவையும் பரிசு இரட்டிப்பாகும்! அதிகபட்சப் பரிசு ரூ. 400/-. மேடைப் பேச்சாகவோ, உரை யாடலாகவோ கீழே உள்ள கூப்பனில் எழுதி அனுப்புங்கள். உறை மீது தயவு செய்து ''தளபதி திடமதி'' என்று தவறாமல் குறிப்பிடவும்.

கூப்பன்:

கல்கி இதழ் 20.3.88 — முடிவு தேதி: 29.3.88.

தளபதி திடமதி: ''.......................

.............................................

.............................................

.............................................

.............................................

.............................................

.............................................

.............................................

.............................................

.............................................

.............................................''

என் பெயர்: .................................

விலாசம்: .................................

.............................................



# DUGAR INVESTMENTS LIMITED

Regd. Office : No. 805, Mount Road, (Opp. LIC Bldg.) P.B. 3733, Madras – 600 002. Phone : 87888, 912854

## INVITES PUBLIC DEPOSITS

### GOLDEN CERTIFICATES

| Period | Amount | Certificate Value | Annual Yield |
|---|---|---|---|
| 36 Months | Rs. 3,286/- | Rs. 5,000/- | 17.38% |

Amounts will be accepted in multiples of Rs. 3,286/- and Certificates will be issued in multiples of Rs. 5,000/-

### FIXED DEPOSIT

### INTEREST PAID MONTHLY

| Period | 6 months | 1 year | 2 & 3 years |
|---|---|---|---|
| Rate of interest per annum | 13% | 13½% | 14% |

### CUMULATIVE DEPOSIT

| Amount | Period | Maturity Value | For every additional sum of Rs. 1,000/- | Annual Yield |
|---|---|---|---|---|
| Rs. 3,000/- | 6 Months | Rs. 3,201/- | Rs. 1,067/- | 13.4% |
| | 1 Year | Rs. 3,450/- | Rs. 1,150/- | 15% |
| | 2 Years | Rs. 3,966/- | Rs. 1,322/- | 16.1% |
| | 3 Years | Rs. 4,563/- | Rs. 1,521/- | 17.36% |

Deposits are accepted in multiples of Rs 1,000/- with a minimum of Rs 3,000/-

### HIGHLIGHTS

1. The schemes are as per the directives of Reserve Bank of India.
2. Deposits are also accepted from the Non-Resident Indians on non-repatriation basis.
3. Interest at 14% p.a. for Shareholders, Employees and Charitable Institutions irrespective of the period.

f & g Profits of the Company, before and after making provision for Tax and Dividends, declared by the Company for the three financial years immediately preceding the date of advertisement.

| Year ended | Profit before provision for tax | Profit after provision for tax | Dividend declared |
|---|---|---|---|
| | (Rs in lakhs) | (Rs in lakhs) | |
| 31.12.1984 | 11.16 | 11.16 | 25% |
| 31.12.1985 | 12.23 | 12.23 | 25% |
| 31.12.1986 | 21.28 | 21.28 | 25% |

h) Summarised financial position of the Company as appearing in the two latest Audited Balance Sheets.

| LIABILITIES | 31-12-1986 | 31-12-1985 | ASSETS | 31-12-1986 | 31-12-1985 |
|---|---|---|---|---|---|
| | (Rs in lakhs) | | | (Rs in lakhs) | |
| Share Capital | 60.00 | 40.00 | Fixed Assets | 161.97 | 83.36 |
| Reserve & Surplus | 23.80 | 16.27 | Current Assets | 607.97 | 410.07 |
| Secured Loans | 363.48 | 242.93 | Loans & Advances | 47.86 | 37.67 |
| Unsecured Loans | 214.62 | 156.54 | | | |
| Current Liabilities & Provisions | 155.90 | 75.36 | | | |
| | 817.80 | 531.10 | | 817.80 | 531.10 |

| i) Contingent Liabilities | 1986 | 1985 |
|---|---|---|
| | (Rs. in lakhs) | |
| a) Estimated amount of contracts remaining to be executed on capital account and not provided for | 14.60 | 13.50 |
| b) Counter guarantee to Bankers | 3.00 | NIL |
| The Company can raise by way of deposits under the directions | Rs. 838.00 | |
| Aggregate of deposits actually held as on 31-12-1986 | Rs. 214.62 | |

j) The Company has no overdue deposits other than unclaimed deposits.

k) The Company hereby declares :

i) that the Company has complied with the applicable provisions of the directions of Reserve Bank of India

ii) that the compliance with the directions does not imply that the repayment of deposits is guaranteed by the Reserve Bank of India and

4. **For a single deposit of Rs. 25,000/- and above, interest at 14% per annum, will be paid, even for one year deposits.**
5. **INTEREST IS PAID MONTHLY irrespective of amount or period of deposit. COMPUTERISED POST DATED INTEREST WARRANTS for the entire period of the deposit will be issued along with the Fixed Deposit Receipt.**
6. **Interest is payable at par at all Branches of STATE BANK OF INDIA in India.**
7. **Interest will be calculated from the date of tendering the draft/cheque along with the application at the Company's offices or to the Managers/Brokers to the Scheme.**
8. **Deposits are accepted even for a short duration of 6 months.**
9. **No deduction of Income Tax at source, if the interest payable is less than Rs. 2,500/- in any financial year.**
10. **No deduction of Income tax at source, if declaration is furnished in Form No. 15-H even though the interest is over Rs. 2,500/-**

Particulars required to be specified as per Non-Banking Financial Companies and Miscellaneous Non-Banking Companies (Advertisement) Rules, 1977.

a) Name of the Company : Dugar Investments Limited
b) Date of Incorporation : 20th May, 1981.
c) Business : Hire Purchase on Motor Vehicles, Equipment Leasing and Public Deposits.
Branches : Bangalore, Coimbatore, Delhi, Ernakulam, Gudur, Nellore, Pondicherry, Salem Secunderabad, Tirunelveli, Vijayawada and Visakhapatnam.
d) Management : The Company is managed by its Managing Director under the supervision of the Board.
e) Names, Address and Occupation of the Directors :

| | NAME | ADDRESS | OCCUPATION |
|---|---|---|---|
| 1. | Dr. C. Anna Rao (Chairman) | Chelikani Anna Rao Road, Sripuram Colony, Tirupati 517 507. A.P. | Former Chairman, Board of Trustees, Tirumala Tirupati Devasthanams. |
| 2. | Shri B. Lalchand Marlecha (Vice-Chairman) | 30, Mannarswami Koil Street, Royapuram, Madras - 600 013. | Merchant & Banker |
| 3. | Shri N Narayan Rao | 'Sree Nilayam', 1-7-54/B Sarojini Devi Road, Secunderabad - 500 003. A.P. | Company Director |
| 4. | Shri N. Mahaveerchand Dugar | 'Dugar House' 7, Peddu Naicken Street, Kondithope Madras - 600 079. | Banker and Mine Owner |
| 5. | Shri C R Rao | 'White House' Gudur - 524 101. A.P. | Company Director |
| 6. | Shri V Ramachandran | 24, Nungambakkam High Road, Madras - 600 034. | Advocate |
| 7. | Shri C V Krishnaiah | 'Sree Krupa' Nehru Nagar Gudur - 524 101. A.P. | Mine Owner and Company Director |
| 8. | Shri R Ramakrishnan | 'Hari', 14 Seethamma Road, Madras - 600 018 | Former Member Rajya Sabha |
| 9. | Shri M K Pandurunga Setty | 'Prashanth' 27, Bull Temple Road, Bangalore - 560 004. | Industrialist & Company Director |
| 10. | Shri K S T Pani | 'Suseelam' 45, Mandapam Road, Kilpauk, Madras - 600 010. | Chief General Manager (Retd) State Bank of India & Company Director |
| 11. | Shri N. Tarachand Dugar Managing Director | 21, Commander-in-Chief Road, Madras - 600 105. | Industrialist and Banker |

iii) that the deposits accepted by the Company will be unsecured and rank pari-passu with other unsecured liabilities.

By Order of the Board
for DUGAR INVESTMENTS LIMITED
N TARACHAND DUGAR
Managing Director

Madras
29-5-1987

This advertisement is issued on the authority and in the name of the Board of Directors of the Company. The text was approved by the Board of Directors on 29.5.1987 and a copy duly signed by a majority of the Directors has been filed with the Regional Office of Reserve Bank of India, Department of Financial Companies, Bangalore.

**Details and application forms can be had from any of the following Offices of the Company and Managers, Principal Brokers to the Fixed Deposit Schemes and other leading Brokers.**

| | |
|---|---|
| **MADRAS** | : Regd. Office : 805, Mount Road (Opp. LIC Bldg), P B No 3733, Madras - 600 002. Tel : 87888 and 812854. |
| **BANGALORE** | : 'BLU MOON COMPLEX,' 2nd Floor, 67, M.G. Road, Bangalore - 560 001. Tel : 565444 |
| **COIMBATORE** | : 'FATEMA MANZIL', 9/253, 2nd Floor, Dr Nanjappa Road, Gandhipuram, Coimbatore - 641 018 |
| **DELHI** | : 108/3, Moti Bazar, Chandni Chowk, Delhi - 110 006 Tel : 269904/266681 |
| **ERNAKULAM** | : 'SUDAN BUILDING', 2nd floor, 900-A, M.G. Road, Ernakulam, Cochin - 682 011. Tel : 369515. |
| **GUDUR** | : 'DUGAR HOUSE', 8/85, Raja Street, Gudur - 524 101. A.P. Tel : 330 |
| **NELLORE** | : 17/115, Trunk Road, Nellore - 524 001. Tel : 6266 |
| **PONDICHERRY** | : 37-B, Jawaharlal Nehru Street, Pondicherry - 605 001. Tel : 6806 |
| **SALEM** | : 'CENTRAL COMMERCIAL COMPLEX, 77 Omalur Road, Salem - 636 001. |
| **SECUNDERABAD** | : 'AISHWARYA BUILDING', 1st Floor, 126, M.G. Road, Secunderabad - 500 003. Tel : 72029 |
| **TIRUNELVELI** | : 162, West Car Street, Tirunelveli Town, Tirunelveli - 627 006. Tel : 24599 |
| **VIJAYAWADA** | : 40-1-42B, Bandar Road, 1st Floor, Labbipet, Vijayawada - 520 010 Tel : 65668. |
| **VISAKHAPATNAM** | : 28-2-52/1, 1st Floor, Main Road, Jagadamba Junction, Visakhapatnam - 530 020 Tel : 69626. |

## MANAGERS TO THE DEPOSIT SCHEME

**M/S. J.M. FINANCIAL & INVESTMENT CONSULTANCY SERVICES PVT LTD.,** 141 Maker Chambers, III (13th Floor), Nariman Point, Bombay - 400 021 and its Branches at Ahmedabad, Bangalore, Baroda, Calcutta, Cochin, Goa, Hyderabad, Jaipur, Madras, New Delhi, Pune and Surat.

**M/S MADAN & CO. LTD.,** "MADAN HOUSE", 7 Ramanuja Iyer Street, Madras - 600 079 Phone : 37508, 34853 and 31449 "SAKTHI TOWERS" 1st Floor, Second Tower, 'F' 766, Anna Salai, Madras - 600 002 and its Branches at Coimbatore, Hyderabad, New Delhi and Visakhapatnam.

### PRINCIPAL BROKERS

**M/s ALPHA FINANCIAL CONSULTANCY SERVICES,** "KAMALA ARCADE", 669, Mount Road, Thousand Lights, Madras - 600 006 and its offices at Bangalore and Hyderabad. **M/s INTEGRATED ENTERPRISES,** No 36, Pachaiyappa Mudali Street, Kumbakonam - 612 001 and its offices at Bangalore, Bombay, Coimbatore, Hyderabad, Madras, Madurai & Tiruchirapalli. **M/s UNIVERSAL FINANCE TRADERS LIMITED,** "CONTINENTAL CHAMBERS" 142, Ground Floor, Nungambakkam High Road, Madras - 600 034. 157 Linghi Chetty Street, 1st Floor, Madras - 600 001 and their offices at Bombay, Calcutta and New Delhi. **M/s ARKAY INVESTMENT AND CONSULTANCY SERVICES,** Regd. Office : 23 Rameswaram Road, T. Nagar, Madras - 600 017. Branch Office : Nataraja Building, Room No 4 (3rd floor), 21 Second Line Beach, Madras - 600 001. **M/s M.R.K. CONSULTANCY SERVICES,** "KANKARIA BHAVAN", No 12, Kalathipillai Street (1st Floor), Sowcarpet, Madras - 600 079.

# வேரில்லாத மரங்கள்

**23**

**ம**காதேவன் பேனாவைக் கீழே வைத்தார். இரண்டு கைகளையும் தலைக்கு மேல் உயர்த்தி, ''ஊ... ஊ... ஹி...'' என்கிற சின்னச் சத்தத்தோடு சோம்பல் முறித்தார்.

அரை நிமிஷத்துக்கு முன்னால் முத்து ''ஆறிடப் போகுது சார்... குடிச்சிட்டு எழுதுங்க...'' என்று கரிசனத்தோடு கூறி, வைத்து விட்டுச் சென்றிருந்த காப்பிக் கோப்பையைக் கையில் எடுத்து மெதுவாகக் குடிக்க ஆரம்பித்தார்.

பார்வை ஜன்னலை ஒட்டி, கறுப்பாய்க் கோடு போட்ட தினுசில் ஒன்றன் பின்னால் ஒன்றாய், சாரியாய்ச் சென்று கொண்டிருந்த எறும்புகள் மேல் விழுந்தது...

பிள்ளையார் எறும்புகள்...

இதற்குப் பிள்ளையார் எறும்புகள் என்று யார் பெயரிட்டார்கள்? எதற்காக?

யோசித்துப் பார்த்த வரையில் எதையும் திருப்திகரமாக ஊகிக்க முடியாது போக, விஷயம் தெரிந்த நண்பர்கள் யாரையாவது அடுத்த முறை சந்திக்கும் போது கேட்க வேண்டும் என்று மனத்தில் குறித்துக் கொண்டவராய், காலிக் கோப்பையை மேஜை மேல் வைத்துவிட்டு, எறும்புகளை இன்னும் திட்டத்தில் ஆராயும் ஆர்வத்துடன் முன்னால் சாய்ந்து உட்கார்ந்தார்.

சுறுசுறுவென்று வேகமாய் ஓடிய ஒவ்வோர் எறும்பும் தன் சைஸைவிடப் பெரியதாய் ஏதோ ஒன்றை வாயில் கௌவியபடி போக, என்ன அது என்கிற கேள்வி மகாதேவனுள் ஜனித்தது.

சர்க்கரை?

மாவுத்தூள்?

இது எதுவுமே இல்லாமல் அதனுடைய முட்டை?

ஆமாம் — எறும்பு இனவிருத்தி செய்வது எப்படி? முட்டை மூலமாகவா — அல்லது...?

நிதானிக்கையில், அன்றாடம் பார்க்கும் எத்தனை சின்னச் சின்ன விஷயங்களுக்குக் கூட விளக்கம் தர முடியாத நிலையில் இருப்பது ஆச்சரியம் கலந்த அவஸ்தையை உண்டு பண்ண, உடனடியாய் என்ஸைக்ளோபீடியா பிரிடானிகா'வை எடுத்து 'எறும்புகள்' — தலைப்பின் கீழ் உள்ள விவரங்களைப் படித்து விட்டே எழுத்தைத் தொடருவது என்கிற தீர்மானத்துடன் எழுந்தவர், திடுமென்று ஓங்கி ஒலித்த குரலினால், கவனம் மாறி, நின்றார்...

அடுத்த வீட்டுப் பெரியவர் குரல்தான்...

கார்ப்பரேஷன் விதிப்படி தேவையான ஐந்து அடிகளை விட்டுவிட்டு இரு வீடுகளும் கட்டப்பட்டு, லேசாக் எக்கினால் ''ஹலோ'' சொல்லிக் கைகுலுக்கிக் கொள்ளும் இடைவெளி மட்டுமே இருந்ததில், கொஞ்சம் உரக்கப் பேசினாலும், பக்கத்தில் நின்று பேசுகிற தினுசில், வேண்டுமோ, வேண்டாமோ அத்தனையும் கேட்க வேண்டிய நிர்ப்பந்தம் வந்து விடுகிறதே!

''கால் கைய ஒழுங்கா வைச்சுக்கிட்டு, எங்காரியத்தைப் பார்த்துக்கிட்டு, 'சிவனே'ன்னு இருக்கிறது கண்ணுல உறுத்துதா? கண்ட இடத்தில தண்ணியைக் கொட்டி வெச்சிட்டா, நான் சறுக்கி விழுந்து காலை ஒடிச்சுக்குவேன்... அப்புறமா 'கிழவனால யாருக்கு என்ன பிரயோஜனம்?'னு இன்னும் அதிகமா மருமகளோட சேர்ந்துக்கிட்டுக் கரிச்சுக் கொட்டலாம், அப்ப திருப்தியாயிடும், இல்லை?''

இருந்த இடத்தை விட்டு நகராமல் ஜன்னல் வழியாகப் பக்கத்து வீட்டைப் பார்த்த போது, வாசல் கேட் அருகில் கையில் பிளாஸ்டிக் பைப்பைப் பிடித்துக் கொண்டு அந்த வயதான அம்மாளும், வெளியே வரப் போகும் உத்தேசத்தோடு வெள்ளைச் சட்டை, வேட்டி, செருப்பு சகிதம் பெரியவரும் நிற்பது தெரிந்தது...

அந்த வீட்டுக்குக் குடிவந்து கிட்டத்தட்டப் பதினைந்து நாட்களாகி விட்ட நிலையில் மாதவனும், வசந்தாவும் கணவன் மனைவி, தணிகாசலம் மாதவனின் தந்தை; பரிமளம் வசந்தாவின் அத்தை என்ற விவரங்களோடு அவர்களிடையே நிலவும் மத வேறுபாடு உணர்வு, கசப்பு, அனுசரிப்பின்மை போன்ற பல சமாசாரங்களையும் நன்றாகவே மகாதேவனால் புரிந்துகொள்ள முடிந்தது...

பின்னே?

பொழுது விடிந்து பொழுது போனால் ஏதாவது அற்ப விஷயத்தில் பெரியவர்களி

சிவசங்கரி

டையே தொடங்கும் சண்டை, இரவு வரையிலும் நீண்டு, முக்கால்வாசிச் சமயம் மாதவன், வசந்தாவையும் தன் கொடுக்குகளால் அடித்துப் பிடித்து விடுவதுதான் கேட்காமலேயே காதில் வந்து விழுந்து நடப்புகளைத் தெரிந்து கொள்ள வைத்து விடுகிறதே!

அதுதவிர மகாதேவனின் எழுத்தாளர் புத்தியும் சேர்ந்து கொள்ளும் போது விஷய ஞானத்துக்குக் குறைச்சல் என்ன?

வம்புக்காக நிச்சயமாய் இல்லாவிட்டாலும், பார்த்து, கேட்டு, படித்து, உணர்ந்து, அனுபவித்துத் தெரிந்து கொள்ளும் சமாசாரங்களை எல்லாம் புத்தியினால் அலசி, வடிகட்டி, சேர்க்க வேண்டியவைகளைச் சேர்த்து, தக்க கருக்களாக மாற்றி, கருத்துப் பரிமாற்றம் செய்து வாசகரின் சிந்தனையைத் தூண்டி விடுவதில்தானே ஓர் எழுத்தாளரின் வெற்றியே இருக்கிறது?

ஆனாலும், ஸ்வபாவத்தில் அடுத்தவர் அந்தரங்கத்தில் தலையிடாமல், தம் வழிக்கும் அனாவசியமாய் யாரும் வந்து நுழைவதில் விருப்பப்படாத மகாதேவனுக்கு அடுத்த வீட்டிலிருந்து காலையும், மாலையும் தப்பாமல் எழுந்த கூச்சல், சண்டைகள் முதல் ஓரிரு நாட்கள் மகா தொந்தரவாகவே இருந்தன.

ஐம்பத்திநாலு வயதான மகாதேவன் ஒரு கட்டைப் பிரம்மச்சாரி. பேராசிரியராக வடக்கே வேலை பார்த்த போதும், விடுமுறை நாட்கள் தப்பாமல் இமாலயக் காடுகளில் தனித்து நடந்து திரிந்தவர்; நேபாளி மக்களிடையே தாமும் ஒருவராக ஊடுருவி வாழ்ந்தவர்; திபெத் நாட்டின் அத்வான புத்த மடாலயங்களை எட்டிப் பார்த்தவர்; கன்னியாகுமரி விவேகானந்த கேந்திராவில் பயிற்சி பெற்றவர்... இன்னும் என்னென்னவோ புதுமை அனுபவங்களை அனுபவித்து அவற்றை முடிந்த வரையில் தம் வாசகர்களோடு வித்தியாசமாகப் பகிர்ந்து கொண்டவர்...

சென்ற வருஷம் சற்றும் எதிர்பாராமல் 'ஹார்ட் அட்டாக்' வந்துவிட, சரி, உழைத்ததும், ஓடியதும் போதும், ஓய்வு பெற்றுக் கொண்டு சென்னைக்குச் சென்று, அமைதியான இடத்தில் நான் உண்டு, என் எழுத்து உண்டு என்று இருந்து விடலாம் என்று தீர்மானித்ததில், இந்த வீட்டை வாடகைக்கு எடுத்துச் சாமான் சஜ்ஜாக்களோடு வந்து நாட்கள் பதினைந்து போல ஆகின்றன.

தனி வீடு. அதிக மனித சஞ்சாரம் அற்ற சூழல். வலதுபக்கம் உள்ளடங்கி மரங்களுக்கு மத்தியில் ஒரு பெருந்தனக்காரர் வீடு... அவர்களால் நிம்மதி அப்படி ஒன்றும் கெட்டு விடாது... இந்தப் பக்கம்? அதுதான் கொஞ்சம் உதைக்கிறது... ரொம்பவும் கிட்டத்தில் வீடு இருக்கிறதே, பரவாயில்லையா...?

வேலை பார்க்கும் தம்பதி, வயதான பெரிய



வர்கள், இவர்களால் அதிகம் தொந்தரவு இருக்காது என்று நம்பலாமே! இந்த ரீதியில் சிந்தித்ததோடு, எங்கு பார்த்தாலும் சேரியும், குட்டையும், சாக்கடைக் கால்வாய்களும், குண்டும் குழியுமாய் உள்ள சென்னை நகரில் இந்த அளவுக்குத் தனிமை கிடைப்பதே அபூர்வம் என்கிற சமாதானமும் சேர்ந்து கொள்ள, பத்து மாதி அட்வான்ஸைத் தந்துவிட்டுக் குடிபெயர்ந்தவருக்குப் பக்கத்து வீட்டுச் சண்டை எரிச்சலைத் தந்ததில் ஆச்சரியம் என்ன?

அதுவும் இந்த மகாதேவன், இருக்கிறாரே; அவர் இன்றைய எழுத்தாளர்களிடையே இருந்து கொஞ்சம் மாறுபட்டவர் என்பதை ஒப்புக் கொண்டே தீர வேண்டும்.

இலக்கிய உலகம் போற்றும் இருபத்திரண்டு புதினங்கள், நூற்றுக்கும் மேற்பட்ட சிறுகதைகள், சிந்தனையைத் தூண்டும் கட்டுரைகள் என்று எழுதியும் இதுநாள் வரை ஒரு சில பத்திரிகை ஆசிரியர்களைத் தவிர மற்றவர்களுக்கு அவரை யார் என்றே தெரியாத விதத்தில் மகாதேவன் தன்னைப் பின்னணியில் வைத்துக் கொண்டிருப்பது நிஜம்.

எழுத்தாளர், 'தேவதேவனை' அவரது தரமான எழுத்துக்கள் மூலமாக மக்கள் அறிந்து கொண்டால் போதுமானது, மனிதர் மகாதேவனை நெருக்கமானவர்களைத் தவிர வேறு யாரும் தெரிந்து கொள்ளத் தேவையில்லை என்பது அவரின் பிடிவாதம் என்பதால், பத்திரிகைகளில் ஒரு போட்டோ? இலக்கியக் கூட்டங்களில் மேடை ஏறிப் பேசுவது? ரசிகர்கள் 'உங்க விசிறி சார் நான்' என்று கூற ஒரு போன்? ம்ஹூம், ஒன்றும் கிடையாது.

அதற்காக இலக்கியக் கூட்டம், பொது இடங்கள் எங்குமே போக மாட்டாரா, சதா சர்வ காலம் சிடுசிடுவென்று தமக்குத் தாமே குருட்டுயோசனை பண்ணிக்கொண்டு தனித்து உட்கார்ந்திருப்பாரா என்றால், இல்லை; அதுவும் இல்லை...

எங்கும் போவார்; ஆனால் பின்வரிசையில் அமர்ந்து எந்தக் காழ்ப்புணர்ச்சியும் இல்லாமல் அனைவரது பேச்சையும் கேட்பார்; இவரை நன்கு புரிந்து கொண்ட நண்பர்கள், உறவினர்—எண்ணிப் பத்துப் பேர்களோடு—நெருக்கமாகப் பழகுவார்; அவர்கள் இல்லத்து நல்லது கெட்டது அத்தனைக்கும் முன்னால் நிற்பார்; சம்பாதிக்கும் பணத்தில் பாதியை நன்றாய்ப் படிக்கும் ஏழை மாணவர்களின் சம்பளத்துக்கும், முடியாதவர்களின் வைத்தியத்துக்கும் இரண்டாம் பேர் அறியாமல் செலவழிப்பார்; மூன்று மாதத்துக்கொரு தரம் ரத்தம் கொடுப்பதில் இதுவரை — நம்ப வேண்டும் — முப்பத்தி எட்டு முறை ரத்ததானம் செய்திருக்கிறார். அப்புறம்...

ஜன்னல் வழியாகத் தெரிந்த தணிகாசலத்தின் முகத்தில் இப்படி அப்படி என்று அளவிட முடியாத எரிச்சல் மண்டி இருக்க, மகாதேவன் அவசரமாய் எதிரில் நின்ற பரிமளத்தைப் பார்த்தார்.

''உக்காந்து தின்னு மனுஷங்களுக்குக் கொழுப்பு ஏறிடும்னு கேள்விப்பட்டிருக்கேன்; இப்ப அனுபவிக்கறேன்... வாயைத் திறந்தால் வம்பு வருதுன்னு நான் பாட்டுக்கு வேலைகளைச் செஞ்சிக்கிட்டிருக்கிறது கூடப் பொறுக்காமல் சண்டைக்கு இழுக்கறது

# மாதம் ஒரு மாவட்டம்




**மீண்டும் பசும்பொன், செங்கல்பட்டு மாவட்டங்களுக்கு வருகிறோம் என்பதை நினைவுபடுத்துகிறோம்...**

கடந்த ஆண்டு ஆகஸ்ட், செப்டம்பர் மாதக் கல்கி இதழ்களில் பசும்பொன் முத்துராமலிங்கம் மற்றும் செங்கல்பட்டு மாவட்டப் பிரச்னைகள் பற்றி எழுதியிருந்தோம். கூடவே அந்தந்த மாவட்டக் கலெக்டர் பேட்டியையும் விரிவாக வெளியிட்டிருந்தோம்.

இப்போது அந்தப் பிரச்னைகளெல்லாம் எந்த அளவுக்குத் தீர்க்கப்பட்டிருக்கின்றன? அல்லது இன்னும் தீர்வு காணப்படாமல் உள்ளன? காணப்பட்ட தீர்வுகளையும் எழுதுங்கள்; இன்னும் தீர்வு காணப்படாதவற்றையும் எழுதுங்கள்.

மீண்டும் நமது நிருபர்கள் வரும் ஏப்ரல் மாதத்தில் இந்த இரண்டு மாவட்டங்களிலும் ரீ—விசிட் செய்ய வருகிறார்கள்.

**கடிதங்கள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 20.3.88.**

உடனடியாக எழுதுங்கள்.

— ஆசிரியர்

*Boost is the secret of my energy!*



"பதினைந்து அல்லது இருபது ஓவர்கள் பந்து வீச்சு அல்லது செஞ்சுரியாக அடிக்கும் பேட்டிங், களத்தில் எப்போதும் ஓட்ட ஓட்டம், எமது உத்திகளை கையாளுதல். இப்படித்தான் என்னுடைய கிரிக்கெட்டை நான் ரசித்து விரும்புகிறேன்.

இதற்கு உடல் தகுதியான நிலையில் இருப்பதும், ஏராளமான சக்தியும் தேவை. அதனால்தான் நான் ஆண்டு முழுவதும் கடினமாகப் பயிற்சி செய்கிறேன். அதனால்தான் நான் பூஸ்ட் குடிக்கிறேன் நாள் தோறும்."

கபில்தேவ் பூஸ்ட் பருகுவதற்குக் காரணம், அது அவருக்குத் தேவையான சக்தியையும் அவர் விரும்பும் சுவையையும் அளிக்கிறது. பூஸ்டில் கிரீம் நிறைந்த பால் மற்றும் ஆரோக்கியமான மால்ட்டின் குண நலன்களுடன் கோக்கோவும் கலந்துள்ளது.

கபிலைக் கேளுங்கள். அது அவரது ரகசியம்.




# பூஸ்ட்

## இன்சுவைமிக்க சக்தி

HTA 5079 TAM



"நம்ம காதல் விவகாரம் வீட்டுக்குத் தெரிஞ்சு போச்சுன்னு நினைக்கிறேன்."

"எப்படிச் சொல்றே?"

"சீக்கிரம் வீட்டுக்குப் போனால் என்ன அதுக்குள்ள வந்துட்டேன்னு ரொம்பக் கவலையோட கேட்கிறாங்களே!"

— கிழை அ. கதிர்வேல்.

உங்களுக்கே நல்லா இருக்கா? அட, எதுவானா லும் என்னோட நிறுத்திக்கறது; இதுல வசந் தாவை ஏன் இழுக்கறீங்க? ஆமா சாமி, உங்களுக்கு மொடக்கு வாதம் வரணும், என் மருமகளும் நானும் ஸ்வீட்டா செஞ்சு சாப்பிட ணும்னு காத்துக்கிட்டுத்தான் இருக்கோம்... புரிஞ்சு போச்சு இல்லே, ஆளை விடுங்க..."

அடிவயிற்றிலிருந்து காட்டமாகப் பரி மளம் பதிலுக்குக் கத்த, 'கும்மா கிடந்த சங்கை ஊதிக் கெடுத்துவிட்ட சங்கடத் துடன் தணிகாசலம் பேசாமல் நகர, அந்தச் சண்டையை நின்று வேடிக்கை பார்த்தது சட்டென்று ஒருவிதக் குற்ற உணர்வைத் தர, மகாதேவன் முகத்தைத் திருப்பிக் கொண் டார்.

எதற்காக அவர்கள் இருவரும் ஒன்றுமில் லாததற்கெல்லாம் இத்தனை ஆக்ரோஷ மாகச் சண்டை போட்டுக் கொள்கிறார்கள்?

செடிகளுக்குத் தண்ணீர் விடுகையில் இங்கு அங்கு நீர் தேங்குவது இயற்கைதான்; காலைப் பார்த்து வைத்து நடந்தால் ஆயிற்று... அதை விட்டுவிட்டு அந்தப் பெரியவர் வேண்டுமென்றே அந்த அத்தை செய்துவிட்ட தாக ஏன் குற்றம் சாட்டுகிறார்?

அந்த அம்மாள்தான் ஆகட்டும், வயசான வர் விழுந்து விடுவோமோ என்கிற பயத்தில் பேசுகிறார் என்று விட்டுத் தள்ளாமல் எதற் காக அப்படிப் பதிலுக்கு வெறியோடு கத்த வேண்டும்?

முகவாயைத் தடவியபடி, நாற்காலியில் சாய்ந்த போது, கடந்த நாட்களில் ஏழெட்டுத் தரமாவது பார்த்துவிட்ட இதுசில் இன்று மாலையும் அவரவர் பிள்ளை, மருமகள் அலு வலகத்திலிருந்து வீடு திரும்பியதும் இரண்டு பெரியவர்களும் இதைக் கட்டாயம் பெரிசு பண்ணப் போகிறார்கள் என்று ஊகிக்க முடிந்தது...

பெரியவர்கள் முடியாமையினாலோ, அல்லது தெரியாத்தனத்தாலோ பேசுகிறார் கள் என்று அந்த இளம் தம்பதியாவது புரிந்து 'போகட்டும் விடுங்கள்' என்று ஒதுக் கினால் நன்றாக இருக்கும். ஆனால், எங்கே?

நேற்று? நேற்றுத்தான், காப்பியில் சர்க் கரை போட்டுக் கொடுத்து விட்டதற்காக, "எனக்குச் சர்க்கரை வியாதி இருக்கிறது தெரியுமில்லை, அப்புறமும் சீனி போட்டுத் தந்தா என்ன அர்த்தம்?" என்று பெரியவர் கத்த, அவரோடு மகனும் சேர்ந்து கொள்ள...

அதற்கும் முந்தின நாள் கடையிலிருந்து பெரியவர் சாமான்கள் வாங்கி வருகையில் உடம்புக்குத் தேய்த்துக் கொள்ளும் சோப்பு விட்டுப் போனதில் "அத்தம்மாவுக்கு வாங்கு கிற பொருள் மட்டும் உங்கப்பாவுக்கு மறந் திடும்; அதானே?" என்று மாமனார் காது பட வசந்தா விஷமமாய்க் கேலி பண்ண...

இன்னும் ஒருநாள் — "பூக்கற பூ எல்லாத் தையும் என் முருகன் படத்துக்கு வக்காம தானே அந்தக் கிழவி பறிச்சிடறாப்பா..." என்று தணிகாசலம் புலம்ப, "நான் தண்ணி ஊத்தறேன், பறிக்கக்கறேன்... என் ஏசு வுக்கு வைக்காம இந்தக் கிழத்தோட முருக னுக்கு ஏன் தரணும்?" என்று பதிலுக்குப் பரிமளம் கோபத்துடன் வினவ...

"பிரார்த்தனைக்கு மாதா கோயிலுக்குப் போலாமா ராஜா... சமர்த்தா வந்தின்னா உனக்கு அஞ்சு ரூபா தருவேன்" என்று அத்தையும்;

"டேய்... வீணா அங்கெல்லாம் போய் உருப்படாம ஆயிடாதடா... என்னோட வட பழனி கோயிலுக்கு வந்தால் நான் பத்து ரூபா தர்றேன்... வா ராஜா..." என்று தாத்தா வும்,

மற்றவர்களும், போட்டா போட்டியில் சிறுபிள்ளைத்தனமாய்ப் பேசி, நடந்து, இந்தச் சில நாட்களிலேயே வேண்டிய அளவுக்குக் கேட்டு, பார்த்தாயிற்று...

இவர்கள் ஏன் இப்படி நடந்து கொள்கி றார்கள்?

ஒருத்தரோடு மற்றவர் இருப்பது பிடிக்க வில்லை என்றால், பேசாமல் விலகிப் போய் விடுவதுதானே? அதை விட்டுவிட்டுத் தங்க ளின் கண்களைக் கட்டிவிட்ட தனத்தினால் தாங்களும் கஷ்டப்பட்டு, சுற்றி இருப்பவர் களையும் ஹிம்சித்து...

மகாதேவன் தலையை அசைத்துத் தம்மைத் தாமே உலுக்கிக் கொண்டார்.

எழுத, செய்ய வேண்டிய வேலைகள் தோளுக்கு மேல் இருக்கையில் இது என்ன வேண்டாத ஆராய்ச்சி என்கிற கேள்வி யுடன் பேனாவை மறுபடியும் கையில் எடுத்த போது சுவர்க் கடிகாரம் அவர் 'வாக்' போக வேண்டிய நேரம் வந்துவிட்டதைத் தெரி விக்கிற மாதிரி, ஆறு தரம் அடித்து ஓய்ந் தது..

(தொடரும்)



* அனிக்கனேந்தல் கிராமம்: சாலை வசதி கிடைத்து விட்டது.

இராமநாதபுரம் மாவட்ட ரீ — விசிட்

# ஆர்வத்தோடு செயல்படும் அரசு அதிகாரிகள்

சென்ற ஆண்டு நாம் இரண்டு கல்கி இதழ்களில் (19.4.87 மற்றும் 26.4.87) வெளியிட்டிருந்த இராமநாதபுரம் மாவட்ட பிரச்னைகள் இப்போது எந்த அளவிற்குத் தீர்க்கப்பட்டுள்ளன என்பதை அறிய, முதலில் இராமநாதபுரம் — மண்டபம் நெடுஞ்சாலையிலிருக்கும் உச்சிப் புளிக்கருகிலுள்ள புதுமடம் என்ற கிராமத்திற்குச் சென்றோம்.

சென்ற விசிட்டில் அங்குள்ள ஒரு பாழடைந்த மண்டபத்தில்தான் புதுமடம் ஊரின் துவக்கப்பள்ளி நடப்பதாகக் குறிப்பிட்டிருந்தோம் அல்லவா! இப்போதும் அதில் எந்தவித மாற்றமுமின்றி, அப்படியே தான் அந்தத் துவக்கப்பள்ளி செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. அவ்வூரைச் சேர்ந்த முத்தக்கின் என்னும் இளைஞர் நம்மைச் சந்தித்த போது "ஸார்... தமிழ்நாட்டில் மரத்தடிகளில் பல பள்ளிக் கூடங்கள் நடைபெற்றுக் கொண்டிருப்பது பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். ஆனால், இவ்வளவு சுகாதாரக் கேடு நிறைந்த ஒரு பாழடைந்த மண்டபத்தில் பள்ளிக் கூடம் நடைபெறும் அவல நிலையை எங்களூரான புதுமடத்தில் மட்டும்தான் நீங்கள் பார்க்க முடியும். இங்கு படிக்க வரும் குழந்தைகளும், ஆசிரியர்களும் பாடம் நடத்தும் நேரத்தை விட,

* முத்தக்கின்:
"எதுவும் மாறவில்லை!"





* பாம்பன் பாலம்: முடியும் நிலையில் உள்ளது...

தினசரி காலையில் குவிந்து கிடக்கும் வெள வால் எச்சத்தை அப்புறப்படுத்துவதில்தான் அதிக நேரத்தைச் செலவிடுகின்றனர். கருங் கற்களால் ஆன இம் மண்டபமும் விரிசல் விழுந்து விட்டது! என்றைக்கு விழுமென்று சொல்ல முடியாது. குழந்தைகளை இங்கு படிக்க அனுப்புவதற்குக் கூடப் பெற்றோர் கள் பயப்படுகின்றனர்.

''பள்ளிக் கூடம் தான் இப்படியென்றால், இங்கு மருத்துமனையின் நிலைமை அதை விடக் கொடுமை. முன்பு நீங்கள் வந்த போது, 'அரசு மருத்துவமனை'யாக இருந் தது. இப்போது 'சமூக சுகாதார நிலையமாக' மாறி விட்டது. முன்பிருந்ததை விட இப் போது வசதிகள் மிக மிகக் குறைவு. போதிய மருத்துவரில்லை; போதிய மருந்து களும் இல்லை; சுகாதார வசதியும் இல்லை. குடிக்க நல்ல தண்ணீரில்லை. பாதுகாப்பில்லை. மொத்தத்தில் இந்தச் சுகாதார நிலையமே ஒரு நோயாளியாகத்தான் இருக்கிறது. கொஞ்சம் சீரியஸ் என்றால், இங்கிருந்து 24 கி.மீ. தொலைவிலுள்ள இராமநாதபுரத் திற்குத்தான் செல்ல வேண்டும். எங்கள் நிலைமையைப் பார்த்தீர்களா?'' என்றார்.

அவர் குறிப்பிட்ட மருத்துவமனைக்கு மீண்டும் 'ரீ-விசிட்' செய்தோம். முதலில் இருந்ததை விட மிக மோசமாக இருந்தது. விரிசல் விழுந்த சுவர்கள்; செல்லரித்துப் போன கதவுகள்; கடற்கரை உப்புக் காற்றில் உருக்குலைந்து போன இரும்புக் கதவுகள்; யாருமேயின்றி அனாதை மடம் போன்று ஆஸ்பத்திரி காணப்பட்டது. பாத்ரூம் 'ஸ்டோர் ரூமாக' மாறியிருந்தது. இருந்த சில மருந்துகளும் கவனிப்பாரின்றிக் கிடந் தன. நாங்கள் சென்றிருந்தபோது காவலாள், நர்ஸ், மருத்துவர் — யாருமேயில்லை!



*புதுமடம்: இன்னும் பாழடைந்த மண்டபம்தான்.



*செல்வி காந்தி: இப்போது நடக்கப் பாதை உண்டு.

அரசு மருத்துவமனையாக இருந்ததை இப் போது ஆரம்ப சுகாதார நிலையமாக மாற்றி யிருப்பதையும், அந்நிலையத்தின் பரிதாப மான நிலைமையையும் மாவட்ட சுகாதார அதிகாரி, டாக்டர் சி. கண்ணனை இராம நாதபுரத்தில் சந்தித்த போது, விளக்கினோம்.

''இம் மாவட்டத்தில், எட்டு டிஸ்பென் ஸரிகளையும், இரண்டு அரசு மருத்துவமனை களையும் ஆரம்ப சுகாதார மையமாக மாற்றி யிருக்கிறார்கள். அதற்குக் காரணம், அவற் றின் மீது தனிக் கவனம் செலுத்துவதற்கு வசதியாக இருக்கும் என்பதுதான்! இம் மாவட்டத்தில் எழுபத்தைந்து சதவிகிதத் திற்கு மேல் கிராமத்தைச் சேர்ந்தவர்கள் தான். மேலும் ஆரம்ப சுகாதார நிலையங் களுக்கு மத்திய அரசு அதிக நிதி உதவி அளிக்கிறது. ஆகவே, அரசு மருத்துவ மனையை விட ஆரம்ப சுகாதார நிலையத்தி னால் அதிகமாக மக்கள் பயனடைவார் கள்!'' என்றார் அவர்.

''ஆனால், நாங்கள் சென்ற புதுமடம் மருத்துவமனை அனாதை மடம் போன்று காட்சியளிக்கிறது டாக்டர்!''

''புதுமடம், தொண்டி — ஆகிய இரண்டு மருத்துவமனைகளும் ஆரம்ப சுகாதார நிலை யத்தை விட ஒரு படி மேல். அதாவது அவை சமூக மருத்துவ மையம் ஆகும். தற்போது, தொண்டியில் புதிதாக எக்ஸ்ரே, லேப், ஈ.சி.ஜி. வசதிகள் செய்து கொண்டிருக் கிறோம். அடுத்து, புதுமடத்தைக் கவனிக் கிறோம்!''

''இராமநாதபுரம் நகரின் நடுவில் அதுவும் ஸ்வார்ட்ஸ் மேல்நிலைப் பள்ளியை ஒட்டியுள்ள குளம், திறந்த வெளிக் கக்கூஸாக மாறி நகர் முழுக்க நாற்றமும் கொசு உற்பத்தி மையமாகவும் மாறி வரு கிறதே...?''



“புதிய கலெக்டர்: அவரும் பட்டதாரியா.”

“அதை முற்றுக மணல் போட்டு மூடி விடலாம் என்று நினைத்திருக்கிறோம்!” என்றார் கண்ணன்.

இராமநாதபுரம் மாவட்டத்தில் தீர்வு காணப்பட்டுள்ள சில பிரச்னைகள்....

●● திருவேகம்பத்து அருகிலுள்ள அனிக்க நேந்தல் (அனிக்கனி) கிராமத்து மக்கள், சாலையையோ, பள்ளிக் கூடத்தையோ பார்க்காத பரிதாப நிலைமை விளக்கிப் 'பள்ளிக் கூடம் நான் அறியேன்; பாதையிலும் நடந்தறியேன்' ('கல்கி' – 19.4.'87) இதழில் கவர் ஸ்டோரி வெளியிட்டிருந்தோம் அல்லவா? அதற்கு நல்ல பலன் கிடைத்துள்ளது. வறட்சி நிவாரணத் திட்டத்தின் கீழ், அவர்களுக்கு இப்போது சாலை வசதி செய்து கொடுக்கப்பட்டுள்ளது. புதிய சாலை வசதி கிடைத்த மகிழ்ச்சியில் அனிக்கனேந்தல் மக்கள் காணப்பட்டனர்.

●● உத்திர கோச மங்கைக்குச் செல்லும் நெடுஞ்சாலையில் பயணிகளின் இடைத்தங்கலுக்கு வசதியாக, கட்டடம் ஒன்று கட்டுவதற்கு நில ஆர்ஜிதம் செய்வதற்கான பணிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

●● கடந்த ஆண்டு ,டிசம்பர் 23–ம் தேதியிலிருந்து இராமேஸ்வரத்தில் ஒரு புதிய சுற்றுலா அலுவலகம் செயல்படத் தொடங்கியுள்ளது.

●● சேதுக்கரை, நயினார் கோவில், தொண்டி, திரு உத்திரகோச மங்கை, காஞ்சிரங்குளம், தீர்த்தாண்ட தானம் போன்ற இடங்களைச் சுற்றுலாத் துறையின் மூலம் மேம்படுத்த மத்திய அரசின் உதவிக்காகவும் அரசு ஒப்புதல் பெறுவதற்காகவும் பரிந்துரை செய்யப்பட்டுள்ளது.

●● மண்டபத்திலுள்ள இளைஞர் விடுதியை



“இராமநாதபுரம் – ஊரின் நடுவில் ஒரு சாக்கடைக் குளம்: “விரைவில் மூடப்படும்...”

விரிவுபடுத்துதல், மேலும் புதிதாகப் பயணிகள் தங்குவதற்கு வசதியாகப் பன்னிரண்டு காட்டேஜுகள் கட்டும் பணி ஆகியவை நடந்து வருகின்றன.

●● இராமநாதபுரம் – மண்டபம் நெடுஞ்சாலைக்கருகில், புதிய கலெக்டர் அலுவலகம், மாவட்ட போலீஸ் கண்காணிப்பாளர் அலுவலகம், கருவூல அலுவலகம், கலெக்டர் மற்றும் நீதிபதிகள் தங்குமிடம், ஹவுஸிங் போர்டு காலனி – ஆகியவை கட்டப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

●● இராமநாதபுரத்திலுள்ள அரசு கலைக் கல்லூரிக்குக் கடந்த ஆண்டு ஜூன் முதல், புதிய பிரின்ஸ்பால் நியமிக்கப்பட்டுள்ளதோடு, மாணவர்களுக்கிடையிலிருந்த ஜாதிச் சண்டைக்கு இப்போது முற்றுப் புள்ளி வைக்கப்பட்டுள்ளது!

●● இராமேஸ்வரம், மண்டபம் ரெவின்யூ கிராமங்களிலுள்ள அரசு புறம் போக்கு

நிலத்தை வேலுச்சாமித் தேவர் என்பவர் தமது சொந்த நிலம் என்று சொல்லி நாற்பத்து நான்கு பேருக்கு விற்றுள்ள புகாரை ஆர்.டி.ஓ. விசாரித்து, அவர் யார், யாருக்கெல்லாம் விற்றுள்ளார் என்பது போன்ற விவரங்கள் சேகரிக்கப்பட்டுள்ளதோடு, அவர் மீது நடவடிக்கையெடுக்கும் பணியிலும் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் ஈடுபட்டுள்ளனர்.

●● இராமநாதபுரம், பரமக்குடி அரசு மருத்துவமனைகள் விரிவாக்கப்பட்டுள்ளதோடு, புதிய வசதிகளும் செய்யப்பட்டுள்ளன.

கடைசியில் இப்போது புதிதாக வந்திருக்கும் கலெக்டர், அஜய் பட்டாச்சார்யாவைப் பேட்டி காணச் சென்ற போது, அவர் மட்டுமல்லாமல், சம்பந்தப்பட்ட பல்வேறு துறைகளைச் சேர்ந்த மாவட்ட தலைமை அதிகாரிகளும் உடனிருந்தனர். இராமநாதபுரம் மாவட்டம் சம்பந்தமான பல்வேறு பிரச்னைகளையும் அவரிடம் விளக்கினோம்...

"ஒரு மாவட்டத் தலைநகரான இராமநாதபுரத்தில் இன்னும் எஸ்.டி.டி. கூட வசதி இல்லையே...?"

"எஸ்.டி.டி. வசதிக்கு 'மைக்ரோவேவ் டவர்' நிறுவப்பட வேண்டும். அதற்குப் போதிய இட வசதி வேண்டும். இடம் பெறுவதில் சில சட்டப் பிரச்னைகள் இருந்தன. இப்போது அதைச் சரி செய்து விட்டார்கள். இனி, டெலிகம் யூனிக்கேஷன் தான் பொறுப்பு. அவர்கள் தான் அதை நிறைவேற்ற வேண்டும்!"

"பாம்பன் பாலம் கட்டுமானப் பணி எப்போது முடியும்...?"

"கரையின் இரு பகுதிகளிலிருந்தும் பாலத்தைக் கட்டி வந்து... இப்போது கடலின் மிக ஆழமான பகுதியில் பாலத்தின் நடுப்பகுதி இணைப்பு வேலை நடைபெறுகிறது. அநேகமாக இந்த ஆண்டு இறுதிக்குள் பாம்பன் பால வேலை முடிந்து விடும் என்று எதிர்பார்க்கலாம்!" என்றார் கலெக்டர்.

புதிதாக மாவட்ட ஆட்சிப் பொறுப்பை ஏற்று ஓராண்டுக்குள் விரைவாகப் பணியாற்றிப் பல்வேறு பிரச்னைகளுக்குத் தீர்வு கண்ட மாவட்ட ஆட்சித் தலைவர் அஜய் பட்டாச்சார்யாவுக்கும் அவருக்கு உறுதுணையாக நின்று பணியாற்றி வரும் மாவட்ட அதிகாரிகளுக்கும், மாவட்ட ஆட்சித் தலைவரையும் மற்றும் அதிகாரிகளையும் சந்திப்பதற்கு முழு ஒத்துழைப்புத் தந்த செய்தி — மக்கள் தொடர்பு அலுவலர், கே. பன்னீர் செல்வம், மற்றும் உதவி அலுவலர் இரவீந்திரன் ஆகியோருக்கும் கல்கியின் சார்பிலும் இராமநாதபுரம் மாவட்ட மக்கள் சார்பிலும் நன்றி கூறி விடைபெற்றோம்.

கட்டுரை, புகைப்படங்கள்:

பானு மணாளன்



"அமைச்சரே! நான் மயிலுக்குப் போர்வை கொடுத்தது பற்றி என்ன பேசிக் கொண்டிருக்கிறார்கள்?"

"எகனாமிக் வேஸ்ட்னு பொருளாதார நிபுணர்களும் வெறும் தேர்தல்ஸ்டண்ட்னு அரசியல் வல்லுனர்களும் கருதுகிறார்கள், அரசே!"

— கடுவை கோபால்சாமி.



"தன்னோட ஓவியங்களையெல்லாம் யாருமே ரசிக்கலையேங்கிற வருத்தத்திலேயே அவர் பைத்தியமாயிட்டார்...!"

"அடடா! அப்புறம்?"

"அப்புறம் என்ன... இப்போ அவர் வரையற படமெல்லாம் ஓஹோன்னு விற்பனை ஆகுது"

— கலா.

அவர்: "நீங்க அரசியல் கட்சியில் சேர்ந்ததுக்கு யார் காரணம்?"

இவர்: "என் மனைவி!"

அவர்: "அரசியல் கட்சியில் சேருங்கன்னு அவள் சொன்னாளா?"

இவர்: "ஊஹூம்! புடவை, நகை, சொந்த வீடுன்னு அடிக்கடி புலம்பிக்கிட்டிருந்தா!"

— உ. ராஜாஜி.



**சிந்தி மொழிக் கதை:**

விடியற் காலையிலிருந்தே கிழவருக்கு ரொம்பவும் சிரமமாகத்தானிருந்தது. சங்கடம் அதிகமாகியது.

இது இன்று மட்டுமல்ல! அவரது மகன் அவரது விருப்பத்திற்கு விரோதமாகத் திருமணம் செய்து கொண்டு, வீட்டு வாயிற்படியில் வந்து நின்ற பொழுது, அந்தச் சுப வேளையில் அவரே தம் வீட்டுக் கதவை அறைந்து, மூடினாரே, அன்றிலிருந்து இப்படித்தானிருக்கிறது.

விடியற்காலையில் எழுந்து குளித்து முடித்துக் கோயிலுக்குப் போய்க் கொண்டிருக்கையில், வழியில் அவர் பிள்ளை மனைவியுடன் தாங்காவில் வருவதைப் பார்த்தார். பிளாஸ்டிக் பொம்மை மாதிரி ஒரு சிறு குழந்தை மருமகளின் மடியிலிருந்தது. இன்றைய வேதனைக்கும் சங்கடத்திற்கும் காரணம் இதுதான்: பிள்ளையும், மருமகளும் எதிரே வந்த கிழவரைப் பார்க்கவில்லை என்பதில்லை; அவர்களும் பார்த்தார்கள். மருமகள் சட்டென முக்காட்டை, முகம் மறையும் படி இழுத்து விட்டுக் கொண்டாள். பிள்ளை அவரைப் பாராதது போல் முகத்தை வேறு புறம் திருப்பிக் கொண்டு விட்டான்.

கோபத்தினால் கிழவருக்கு உடம்பெல்லாம் எரிந்தது. அவரும் பிள்ளையின் இந்தப் பாராமுகத்திற்குப் பதிலடி கொடுப்பது போல், நான் மட்டும் குறைந்தவனல்ல என நிரூபிப்பது போல், அவர்களைப் பாராதவர் போல் தலையைக் குனிந்து கொண்டு நடந்து விட்டார். வாயில் முணுமுணுத்துக் கொண்டிருந்த மந்திரங்கள் அப்படியே நின்று போயின. சற்று நேரம் மந்திரம் நினைவு வரவில்லை. தலை கனத்து விட்டது. மகனின் செய்கையை மனத்திற்குள் திட்டிக் கொண்டார். கோபம் பீறிட்டுக் கொண்டு வந்தது. இப்பொழுதெல்லாம் அப்படித்தான் ஏற்படுகிறது.

இதையெல்லாம் நினைத்துத்தான் அவர் தம் மனத்தை, எண்ணங்களை வேறு திசையில் செலுத்த முயற்சி செய்கிறார். வடிகால் தேடி, இங்குமங்கும் பார்க்கும் காட்சிகளிலே மனத்தை லயிக்க விடுகிறார். தினமும் கோவிலுக்குப் போகிறார். வழியில் செல்லும் போது, தோளில் பையை மாட்டிக் கொண்டு, பறவைகளைப் போல் உல்லாசமாய்ச் செல்லும் சிறுவர் சிறுமிகளைப் பார்க்கிறார். யாரோ ஒருவர் தம் குழந்தையின் கையைப் பிடித்துப் பள்ளிக்கு அழைத்துச் சென்று கொண்டிருந்தார். இதைக் கண்டதும் கிழவரைப் பழைய நினைவுகள் தாக்கின. அவரும் தம் மகனை இப்படித்தான் பள்ளிக்கு அழைத்துச் செல்லுவார். பள்ளி விடுவதற்கு முன்னரே வாசலருகே போய் நின்று விடுவார்.

இந்த நினைவுகள் வந்ததுமே அவர் மனம் கனத்து விட்டது. காலம் பிள்ளைக்கும் அப்பாவுக்குமிடையே எத்தனை தூரத்தை ஏற்படுத்தி விட்டது? இன்று அவருடைய பிள்ளை அவரைக் கண்டதுமே முகத்தை வேறு புறம் திருப்பிக் கொண்டு விட்டான். எவனுடைய கையைப் பிடித்து அழைத்துச் சென்று, பாதை வகுத்து, முன்னேற வழி காட்டினாரோ... அதே பிள்ளை!

வீட்டில், மனைவி, தங்கள் பிள்ளை பக்கத்து காலனியில் உள்ள ஒரு பெண்ணைக் காதலிப்பதாகவும் அவளுடன் சுற்றுவதாகவும் அண்டை வீட்டுப் பெண்கள் தன்னிடம் கூறியதாக என்று அவரிடம் சொன்னாளோ, அன்றே அவர் மனம் கசந்து போயிற்று. சினத்தை விட வியப்புத்தான் அதிகம் ஏற்பட்டது. பிள்ளையிடம் இத்தகைய மாறுதல் எப்படி ஏற்பட்டது? அவன் அப்படிப்பட்டவன் அல்லவே! இக் குடும்பத்தில் இம்மாதிரியான செய்கைகள், நடத்தைகள்... ஏற்பட்டதேயில்லையே! காதல், கீதல்... இதெல்லாம் அவருக்குப் புரியாது. தாம் வளர்ந்த சமஸ்காரங்களை மறந்து, துறந்து — இது எப்படி நேரிட்டது!

மனைவி இச் செய்தியைக் காதில் போட்டதும் அவர் சற்று நேரம் கல்லாய்ச் சமைந்து போனார். இந்தக் காலத்தின் போக்கைப் பார்க்கும் போது தம் மகனது செய்கை அப்படியொன்றும் பெரிய தவறாகப்படவில்லை என்பது உண்மைதான். ஆனால் அவருக்கு வருத்தத்தை — வெறுப்பை அளித்தது ஒரு விஷயத்தில்தான். அவர் தம் நண்பருக்கு — அவனுக்கு வேலை வாங்கிக் கொடுக்க உதவினாரே... அவருக்குக் கொடுத்திருந்த வாக்கு பொய்த்து விடுமே என்று தோன்றியது. நடந்தது இதுதான்: பிள்ளையை வேலையில் அமர்த்திய பின் அந்த நண்பர் ஒரு பெண்ணைக் குறிப்பிட்டுத் திருமணம் பற்றிப் பேச்செடுத்தார். கிழவரும் ஆட்சேபம் ஏதும் சொல்லாமல் தம் இசைவைத் தெரிவித்தார். நண்பர் செய்த உதவிக்கு நன்றிக் கடனாக மட்டும் அவர் இதைச் செய்யவில்லை. நண்பர் குறிப்பிட்ட பெண்—

# ஒரு பட்டுக்கயிறு போல



அவர்களது குடும்பம் அவருக்கு மிகவும் பிடித்திருந்தது.

பிள்ளையின் காதல் விவகாரம் பற்றி மனைவி கூறியதும் கிழவருக்கு இது பற்றி மகனிடம் மனம் திறந்து பேசுவதுதான் உசிதம் என்று தோன்றியது.

ஒருநாள் மாலை அதற்குச் சந்தர்ப்பம் கிட்டியதும் அவர் தம் மகனைக் கூப்பிட்டார். அவன் வந்ததும் எவ்விதப் பீடிகையுமின்றி ''ஹும்! கேள்விப்பட்டேன். நீ யாரோ ஒரு பெண்ணுடன் சுற்றுகிறாயாமே. காதல்... கீதல் என்று...?'' — இழுத்தார்.

அப்பா திடீரென்று நேருக்கு நேர் இப்படிக் கேட்பார் என்று பையன் சற்றும் எதிர்பார்க்கவில்லை. இதனால் அதிர்ந்து போய் 'இல்லை' என்பது போல் தலையசைத்தான். ஆனால் மறுகணம், உண்மை வீட்டாருக்குத் தெரிந்தாகி விட்டது. இனி மெய்யைப் பொய்த் திரையிட்டு மறைக்க வேண்டிய அவசியமில்லை என்று நினைத்தவனாய், பவ்யமாக ''ஆமாம்! நீங்கள் கேள்விப்பட்டது உண்மைதான். பக்கத்துக் காலனியில் ஒரு பெண் இருக்கிறாள். எனக்கு ஏற்றவள் என்று தோன்றுகிறது: எங்களிருவர் எண்ணங்களும், கருத்துக்களும் ஒத்துப் போகின்றன. இத்தகைய துணைவி அமைந்தால் வாழ்க்கையில் அதிக சிக்கல்கள் — சிரமங்கள் ஏற்படாதென்று நினைக்கிறேன்...''

மகனது கூற்றில் தவறேதுமிருப்பதாக அவருக்குப் படவில்லை. இருப்பினும் தமது நிலைமையைப் பிள்ளையிடம் சொல்லாமலிருக்க அவரால் இயலவில்லை. ''உனது எண்ணத்தில் தவறேதும் இல்லை. எனது எண்ணமும் கிட்டத்தட்ட இதுதான். ஆனால் எனது நண்பர் சாவ்லாவைத் தெரியுமல்லவா! அவரிடம் உனது திருமணத்திற்காக வாக்குக் கொடுத்து விட்டேன். கிட்டத்தட்ட பேச்சு வார்த்தைகளெல்லாம் முடிந்த மாதிரிதான். இந்நிலையில்... நீயே யோசித்துப் பார். அவருக்கு எப்படி முகத்தைக் காட்டுவேன்?"

பெரியவர் பேசி முடிப்பதற்குள்ளேயே பிள்ளை இடைமறித்தான். — ''அது சரி அப்பா! உங்கள் வாக்கை மதித்து நானே

# சம்பந்தம் பேச வந்தாலும் ஜாக்கி

நடுத்தர வயதுப் பெண்மணி ஒருவர், தஞ்சாவூர் மேலவீதியில் வசிப்பதாகக் கூறிக் கொண்டு எங்கள் வீட்டிற்கு ஒருநாள் வந்தார். வங்கியில் வேலை பார்க்கும் தமது மகளுக்கு என் தம்பி பிள்ளையின் ஜாதகத்தைக் கேட்டார். எங்கள் குடும்பம் பற்றி எல்லாம் தெரிந்தவராகத் தோன்றியதால், நாங்களும் ஜாதகத்தைக் கொடுத்தோம்.

தனக்கு ஒரு மகனும் இருப்பதாகவும் அவனுக்குத் திருமணம் முடிக்க, வேலை பார்க்கும் பெண் தேவை என்றும் அவர் சொல்லவே, சென்னையில் உள்ள எங்கள் உறவினர் ஒருவரது விலாசத்தைத் தந்து அவர்கள் வீட்டில் பெண் கேட்கச் சொன்னேன். பிறகு, தமது பெண்ணின் ஜாதகம் மலையாளத்தில் இருப்பதாகவும் அதனைத் தமிழ்ப்படுத்திக் கொண்டு வருவதாகவும் கூறிச் சென்றார் அப் பெண்மணி.

சென்றவர் பிறகு திரும்பவே இல்லை! ஆனால் சென்னையில் உள்ள எங்கள் உறவினரிடமிருந்து



கடிதம் வந்தது — நாங்கள் விலாசம் கொடுத்ததாகக் கூறிக் கொண்டு ஒரு பெண்மணி சம்பந்தம் பேச

சாவ்லா அங்கிளிடம் சென்று மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்!''

பிள்ளையின் பதிலைக் கேட்டதும், வயதுடன், தம்மை எதிர்த்து உடனுக்குடன் பதில் சொல்லும் அளவுக்கும் பிள்ளை வளர்ந்து விட்டான் என்பது அவருக்குப் புரிந்தது. ஆனால் அனுபவசாலியான அவர் இவ்வளவு எளிதாகத் தோல்வியை ஏற்கத் தயாராக இல்லை. இதனால் பிள்ளையின் பதிலை ஏற்கவோ, மறுக்கவோ இல்லாது, ''அப்படி எதற்காகச் செய்ய வேண்டும்! அதற்கென்ன அவசியம்? நாம் யாரிடமும் எதற்காகவும் மன்னிப்புக் கேட்க வேண்டியது இல்லை...'' என்றார் கடுமையுடன்.

தனது வினயமான அப் போக்கைச் சட்டென உதறுது. ''இல்லை! நீங்களோ, நானோ கொடுத்திருக்கும் ஒரு வாக்கு, நமக்குள் அபிப்பிராய பேதத்தை ஏற்படுத்துவது, எனக்கும் ஏன் தங்களுக்கும் சம்மதமிராது என்றே நினைக்கிறேன்...'' என்றான்.

பிள்ளை சமர்த்காரமான தர்க்கத்தால் தம்மை முறியடிக்க விரும்புவதாக அவருக்குத் தோன்றியது. இனி சற்றுக் கண்டிப்பாகத்தான் நடந்து கொள்ள வேண்டும் எனத் தீர்மானித்தவராய் — ''சில விஷயங்களில் பெரியவர்களின் பேச்சைத் தட்டாமலிருப்பதுதான் உசிதம். இந்த விஷயத்தில் நான் என்ன சொல்கிறேனோ அதன்படி நீ செய்ய வேண்டும்'' என்றார்.

அவரைப் போல் அதிகார தோரணையுடன் இல்லாவிட்டினும் சற்றுக் காரமாகவே பிள்ளை சொன்னான், ''அப்படிச் செய்தால் அப் பெண்மணியின் மதிப்பில் நான் தாழ்ந்து விடுவேன். அவளைத் திருமணம் செய்து கொள்வதாக வாக்களித்திருக்கிறேன் நான்!''

இதைக் கூறியதும் அவன் விருட்டென்று அறையை விட்டு வெளியேறி விட்டான். இன்னும் தாமதித்தால் அப்பா பின்னும் ஆத்திரமடைவார் என்பதை அவன் அறிவான். பெரியவருக்குச் சில சமயம் கோபம் வந்தால் அவ்வளவுதான். அக்கம் பக்கத்தவர்கள் ஜன்னல் வழியே எட்டிப் பார்ப்பார்கள். அவ்வளவு தூரத்திற்குப் போய்விடும்.

இந் நிலையில் இங்கிருந்து நழுவி விடுவதுதான் சிறந்தது எனப் பிள்ளை நினைத்தான்.

இதன் பின் தான் அது நிகழ்ந்தது.

ஒருநாள் அவர் மனைவி, தங்கள் பிள்ளை காதலிக்கும் அப் பெண்ணை ஏதோ ஒரு கோவிலில் அன்று மாலை திருமணம் செய்து கொள்ளப் போவதாக அக்கம் பக்கத்தார் கூறியதாக அவரிடம் சொன்னாள். பெரியவருக்கு ஆத்திரமும் கோபமும் மண்டிக் கொண்டு வந்தது. அக் கணமே அவர் ஒரு கடுமையான முடிவுக்கு வந்து விட்டார். தமது முடிவை வீட்டாருக்கும் தெரிவித்து விட்டார். இனி பிள்ளைக்கும் அவருக்கும், ஏன் அந்த வீட்டிலுள்ளவர்களுக்கும் எந்தச் சம்பந்தமும் கிடையாது. இந்த வீட்டில் அவன் இனிப் படி ஏறக் கூடாது; இனி யாரும் அவனுடன் பேசக் கூடாது. இதுதான் அவரிட்ட உத்தரவு. அன்று மாலை திருமணம் செய்து கொண்டு புது மனைவியோடு பிள்ளை அவர் வீட்டு வாசலுக்கு வந்த போது, ''இனி என் முகத்திலேயே விழிக்காதே...'' என்று கதவை அறைந்து மூடிவிட்டார்.

அதனால் அவன் தன் மாமனார் வீட்டிலேயே தங்கிக் கொண்டான். அப்பா இட்ட கட்டளைப்படி அவன் மீண்டும் வந்து கதவைத் தட்டவில்லை. இருப்பினும் சில சமயம் அவருக்கு எரிச்சலூட்டுவதற்காகவோ, வீட்டிலுள்ள மற்றவர்கள் தங்களைப் பார்க்கட்டுமென்றோ, அந்த வழியாக மனைவியுடன்,

# தை தேவை!

வந்தார் என்றும், மலையாளத்தில் எழுதப்பட்டிருந்த தமது மகளின் ஜாதகத்தைத் தமிழ்ப்படுத்திக் கொண்டு வருவதாகக் கூறிச் சென்ற அவர் பிறகு திரும்பவேயில்லையென்றும் அதில் குறிப்பிட்டிருந்தது. அதனினும் அதிர்ச்சி தரும் செய்தி ஒன்றும் அக்கடிதத்தில் இருந்தது — அப்பெண் வந்து சென்ற தினத்தன்று அவர்கள் வீட்டில் ரூபாய் முந்நூறு காணாமல் போய்விட்டது என்பதுதான் அச்செய்தி. அப்பெண்மணி பாத்ரூமை உபயோகிக்க வேண்டும் என்று கேட்டதால் படுக்கையறையை ஒட்டியிருந்த கழிவறையைக் காண்பித்துவிட்டு எங்கள் உறவினர் காப்பி தயாரித்துவரச் சென்றாராம். அந்தச் சிறிய இடைவேளை நேரத்தைப் பயன்படுத்திக் கொண்டு, பெண் கேட்க வந்தவர், திறந்திருந்த படுக்கையறை பீரோவிலிருந்து ரூபாய் முந்நூறை அபேஸ் செய்து விட்டார்!

— எஸ். ராமச்சந்திரன், திருவையாறு.

செல்வதுண்டு. அச்சமயம் வீட்டிலுள்ளவர்கள் திருட்டுத்தனமாக ஜன்னல் திரைகளை லேசாக விலக்கி விட்டு அவர்களைப் பார்ப்பார்கள். ஆனால் பெரியவரின் உத்தரவை மீறி அவர்களிடம் பேசும் துணிவு மட்டும் எவருக்கும் எழவில்லை.

காற்று வாக்கில் செய்திகள் வந்தன... 'அவன் மனைவி கர்ப்பமாக இருக்கிறாளாம்...'' அவன் மனைவியைப்பிரசவ ஆஸ்பத்திரியில் சேர்த்து இரண்டு நாட்களாகிறதாம்...'

பெரியவர் காதுக்கும் இது எட்டியது. ஆயினும் அவரது மௌனம் கலையவில்லை. பிரிவு என்னும் அந்தக் கோட்டைச் சுவரைப் பின்னும் பலப்படுத்திக் கொண்டு அவர் தளராத உறுதியுடனிருந்தார்.

**ப**க்கத்து வீட்டுப் பெண் வந்து, அவருக்குப் பேரன் பிறந்துள்ள செய்தியையும் இரண்டு நாள் முன்பு சொல்லிவிட்டுப் போனாள்.

அக்கணத்திலிருந்து பெரியவருக்கு நிலை கொள்ளவில்லை. பிள்ளையுடன் உறவை முறித்துக் கொண்டு விட்டாலும், பேரன் பிறந்துள்ள செய்தி, அக்கணமே நர்சிங் ஹோமிற்குச் சென்று குழந்தையைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அவரது நிம்மதியைக் குலைத்து விட்டது. குழந்தையைப் பார்க்க வேண்டும்; அதை வாரி அணைத்து முத்தமிட வேண்டும் என்றெல்லாம் ஆசைகள் கிளர்ந்தெழுந்தன. அவர் பரபரப்படைந்தார்.

பிள்ளை தனக்கு மகன் பிறந்த செய்தியைச் சொல்லி அனுப்பவில்லை. அவர் போய் நின்றால் ஊரார் சிரிக்க மாட்டார்களா? அவரது வைராக்கியம் என்னவது! பிள்ளையே 'எங்களுடன் உங்களுக்கு எந்த உறவுமில்லையே, எதற்காக வந்தீர்கள்?' என்று கேட்டு விட்டால்... 'என் குழந்தைக்கும் உங்களுக்கும் மட்டும் என்ன சம்பந்தம்?' எனக் கேட்டு விட்டால்?

நெடு நேரம் யோசித்த பிறகு அவர் ஒரு திட்டம் போட்டார். விசிட்டர்கள் செல்லும் நேரத்தில் அல்லாது, மற்ற சமயத்தில் அவர் நர்சிங் ஹோமுக்குச் சென்று, நர்ஸின் உதவியுடன் பேரனை மட்டும் பார்த்துவிட்டு வந்து விடுவது என்று! பிறந்த குழந்தைகளைத் தனி அறையில் — தொட்டிலில் கிடத்தி இருப்பார்கள் அல்லவா? அங்கு சென்று பார்த்து விடுவது என்ற முடிவுக்கு வந்தார்.

ஆனால் பெரியவரின் திட்டம் முழுவெற்றியை அடையவில்லை. முதலில் விசிட்டர்களுக்கு அல்லாத வேளையில் நர்சிங் ஹோமுக்குள் நுழையத் தர்வானை ரொம்பவும் தாஜா செய்ய வேண்டியிருந்தது. எப்படியோ மாடிக்குச் சென்று, அங்கிருந்த நர்ஸிடம் தம் பேரனைக் காண்பிக்கும்படி வற்புறுத்தினார். அவ்வறைக்குள் எவரும் நுழையக் கூடாது. நர்ஸ் அவரது வயதைக் கருதி மரியாதை கொடுக்க நினைத்தவளாய்த் தூரத்திலிருந்தே துணிகளுக்கிடையே பதிந்திருந்த குழந்தையின் முகத்தைக் காட்டினாள். அக்கணம் பெரியவர் பூரித்துப் போனார். உள்ளமெல்லாம் உவகையால் நிறைந்து பொங்கியது. நர்ஸ் குழந்தையை மடியில் எடுத்துக் கொள்ள அனுமதிக்காவிடினும் பரவாயில்லை. அதன் பட்டுப் போன்ற கேசத்தை, மென்மையான உடலைத் தடவிக் கொடுக்க அனுமதிப்பாளா? என்ற ஏக்கம் பிறந்தது. மெல்ல நர்ஸிடம் தமது விருப்பத்தை வெளியிட்டதும் அவள் ஒரேயடியாய் மறுத்து விட்டாள். ''விசிட்டர்ஸ் நேரத்தில் வாருங்கள் பார்க்கலாம்'' எனக் கூறிவிட்டாள்.

வாடிய முகத்துடன் பெரியவர் திரும்ப நேர்ந்தது. குழந்தையை மடியில் எடுத்துக் கொள்ள வேண்டுமென்ற ஆவலில், அதன் முகத்தைக் கூடத் தாம் சரியாகப் பார்க்கவில்லை என்று அவருக்குத் தோன்றியது. குழந்தை யார் ஜாடை? என்ற ஆவலும் கிளர்ந்தது.

தாம் சென்றது, குழந்தையைப் பார்த்தது எதுவும் வீட்டாருக்கோ, மருமகள் வீட்டாருக்கோ, பிள்ளைக்கோ தெரியாது என்பதில் அவருக்கு அலாதியான மகிழ்ச்சியும் ஏற்பட்டது.

**இ**ன்றைய சந்திப்பிற்குப் பின் அவர் முற்றிலும் நிலை குலைந்து போனார் என்றே சொல்லலாம். பிள்ளை மருமகளை நர்சிங் ஹோமிலிருந்து வீட்டிற்கு அழைத்துச் செல்லுகிறான் போலும்! முகத்தைத் திருப்பிக் கொண்டல்லவா போனான் அவன்.

கோவிலிலும் அவர் மனம் செல்லவில்லை. குழந்தையினிடம் ஏற்பட்ட பாசம் பட்டுக் கயிறு போல் அவரை மெல்ல மெல்லப் பிணைக்கத் துவங்கியிருந்தது. அப் பிணைப்பு அவரையுமறியாமல் அக்குழந்தையின்

பால் அவரை இழுத்தது. ரிடையர் ஆனதிலிருந்து அவர் தம்மையொத்த வயதானவர்களுடன் கோவிலில் அமர்ந்து பேசிக் கொண்டிருப்பார். பேசுவதற்கு எத்தனையோ விஷயங்கள். மதம், ஆசார அனுஷ்டானங்கள், அரசியல், காலத்தின் அலங்கோலம் — இப்படி எத்தனையோ!

ஆனால் இன்று அவர்களுடன் அவர் பேச உட்காரவில்லை. விரைவிலேயே வீடு திரும்பி விட்டார். ஆனால் வீட்டிற்கு வரவில்லை. அவரது கால்கள் அவரையுமறியாமல் பக்கத்துக் காலனியை நோக்கி நடை போட்டன. இதுவரை காலெடுத்து வைக்காத மருமகளின் பிறந்த வீட்டை நோக்கி அவர் சென்றார்.

வாசலருகே சென்றதும் சுற்று முற்றும் பார்த்தார். ஒருவரும் அவரைக் கவனித்ததாகத் தெரியவில்லை. மெல்ல ஜன்னலருகே சென்று பார்த்தார். திருடன் மாதிரி பதுங்கி இருந்து எட்டிப் பார்த்தார். நல்ல வேளை; ஜன்னலருகிலிருந்த கட்டிலில் துணிக் குவியலுக்கிடையே கள்ளமற்ற அச்சிசு உறங்கிக் கொண்டிருந்தது. அறையிலே இரண்டொருவர் இருந்தனர். ஆனால் ஜன்னல் பக்கம் முதுகைக் காட்டிக் கொண்டு நின்றனர்.

சாளரத்தின் வழியே கையை விட்டுக் குழந்தையைத் தம் பேரனை அதன் பட்டுப் போன்ற உடலைத் தடவிக் கொடுக்க வேண்டுமென்ற பேரவா அவரை ஆட்கொண்டது. மெல்லத் தம் கரத்தை ஜன்னலின் சட்டத்தின் மீது வைத்தவர் மறுகணம் என்ன நினைத்தாரோ, விலகி நின்றார்! இது எத்தனை விந்தையானது! விதியின் கொடுமையா இது! தம் பேரனைக் காண, அவனைத் தொட்டுப் பார்க்கத் திருடனைப் போல் பதுங்கி நின்று... சீச்சீ!

அவரது விழிகள் நீரால் நிறைந்தன. தமக்கு என்ன நேர்ந்து விட்டதென்று அவருக்கே புரியவில்லை. பெற்று வளர்த்த மகனுடன் உறவுகளையெல்லாம் துண்டித்துக் கொண்டு விட்டார்; இன்று பிறந்துள்ள சிசுவுக்காக அதனிடம் கொண்டுள்ள பாசத்தினால் கவர்ந்திழுக்கப்பட்டு இங்கு வந்து நிற்கிறாரே!

இனி என்ன செய்வது என்பது அவருக்கே புரியவில்லை. கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் பெருகியது. கண்களைத் துடைத்துக் கொண்டு மீண்டும் ஒருமுறை ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தார். தன் தாத்தாவின் அன்பை, பாசத்தையெல்லாம் அறியாத அந்த மாசற்ற சிசு விழிகளை மூடிய வண்ணம் உறக்கத்திலாழ்ந்திருந்தது.

சட்டெனத் திரும்பிய கிழவரின் பார்வை அந்த வீட்டின் வாசற்படியின் மீது விழுந்தது.

அங்கு அவருடைய பிள்ளை எப்பொழுதிலிருந்து அங்கே நின்று அவரைப் பார்த்துக் கொண்டிருந்தானோ, தெரியாது!

*தமிழில்: சரஸ்வதி ராம்னாத்*

# ஜெயசக்தி சிட்ஸ் & பைனான்ஸ் (பி) லிட்

நிர்வாக அலுவலகம் :-
39, நடேசன் தெரு (2-வது மாடி) சிவா-விஷ்ணு கோயில் அருகில்
தி.நகர், சென்னை-600 017. போன் : 442218/445494

## துவங்கும் புதிய சீட்டு குரூப்புகள்
## (CENTRALIZED GROUPS)

| மாதங்கள் | உறுப்பினர்கள் | சந்தா தொகை | சீட்டு தொகை |
|---|---|---|---|
| 20 | 20 | 100 | 2,000 |
| 20 | 20 | 250 | 5,000 |
| 20 | 20 | 500 | 10,000 |
| 20 | 20 | 1000 | 20,000 |
| 20 | 20 | 2000 | 40,000 |
| 40 | 40 | 125 | 5,000 |
| 40 | 40 | 250 | 10,000 |
| 40 | 40 | 500 | 20,000 |
| 100 | 100 | 250 | 25,000 |
| 100 | 100 | 500 | 50,000 |

ஏல முறை :-

1. 100 மாத சீட்டுகள் உச்சவரம்பற்ற ஏலமாக (Unlimited Bidding) மூடி முத்திரையிட்ட டெண்டர் மூலம் கோரலாம்.
2. 20/40 மாத சீட்டுகள் :- "பாதுகாப்பு தொகையுடன்" கூடிய உச்சவரம்பற்ற ஏலமாக கோரலாம்.

விசேஷ சலுகை :-

1. புதிதாக சேரும் உறுப்பினர்களுக்கு 1% ஊக்க போனஸ் வழங்கப்படும்.
2. புதிய உறுப்பினர்களை அறிமுகம் செய்வோருக்கும் 1% ஊக்க போனஸ் வழங்கப்படும்.

விபரம் வேண்டுவோர் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :-

● சென்னை :- 39, நடேசன் தெரு, (2-வது மாடி) சிவா விஷ்ணு கோயில் அருகில், தி.நகர், சென்னை-600 017. போன் : 442218/445494 ● திருச்சி :- 22, மதுரை ரோடு, (முதல் மாடி) ராஜா தியேட்டர் அருகில், திருச்சிராப்பள்ளி-620 008. போன் : 31376/33397 ● கோயமுத்தூர் :- 666, ராஜா தெரு (முதல் மாடி) கோயமுத்தூர்-641 001. போன் :- 34369 ● மதுரை :- 41, வடக்கு வெளி வீதி, (முதல் மாடி) மாடர்ன் லாட்ஜ் ஸ்டாப்பிங், மதுரை-625 001. போன் : 36004 ● பாண்டிச்சேரி :- 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்) 2-வது மாடி, பாண்டிச்சேரி-605 001. போன் : 26493/26471 ● திருநெல்வேலி :- மீரான் காம்ப்ளக்ஸ் 18, K.S.N. அம்பர் ரோடு, திருநெல்வேலி-627 001. போன் : 25785 ● தஞ்சாவூர் :- எண் 2 & 3 முதல் மாடி, தி.எ. கனல் ரோடு, தஞ்சாவூர்-613 001. போன் : 21696/22286 ● பெங்களூர் :- 24/1-A, மார்கோஸா ரோடு, (10-வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003. போன் :- 366971 ● கும்பகோணம் :- 12, கிழக்கு சாரங்கபாணி தெரு, கும்பகோணம்-612 001. போன் : 22647 ● திருவண்ணாமலை :- 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601. போன் : 2483 ● பட்டுக்கோட்டை :- 121/B, தபேயார் தெரு, பட்டுக்கோட்டை-614 601. போன் : 453 ● தூத்துக்குடி 10 & 11 விக்டோரியா சாலை, தூத்துக்குடி-628 001. ● வேலூர் :- 40, தெண்ணமரத் தெரு, வேலூர்-632 001
ஈரோடு: 10, முதல் தெரு, சாஸ்திரி நகர், ... ஈரோடு — 638 001.

LOTUS/15/88

# நீங்கள் கேட்டவை — தராசு

* எல். மாறன், மேல்பட்டி.

? பள்ளிக் கூடம் இருக்கிறது — தரமான கல்வி இல்லை; நீதிமன்றம் இருக்கிறது — கலபத்தில் நீதி கிடைப்பதில்லை; போலீஸ் இருக்கிறது — பாதுகாப்பு இல்லை. இந்த நிலைமை மாற வழி என்ன?

! மக்களிடம் விலைமதிப்பில்லாத வோட்டு இருக்கிறது — சரியான முடிவுகளைத்தான் எடுப்பதில்லை. இந்த நிலை மாறினால் மற்ற அனைத்தும் தாமாகவே மாறிவிடும்.

* மு. வெங்கட்கண்ணு, திருச்சி — 20.

? தொலைக் காட்சியில் செய்தி வாசிப்பவர்கள் தேர்தலில் போட்டியிட்டால் எப்படி இருக்கும்?

! சொல்ல முடியாது! சினிமாவுக்கு அடுத்தபடியாக அங்கும் ஓர் 'இமேஜ்' இருக்கிறது. நடந்தாலும் நடந்துவிடும்!

* க. தியாகராசன், நெய்வேலி.

? ராமாவரம் தோட்டத்திலிருந்து தொண்ணூறு கோடி ரூபாயை ஜானகி வீரப்பனிடம் தந்ததாக முன்னாள் நிதியமைச்சர் நெடுஞ்செழியன் கூறியிருக்கிறார். திருநாவுக்கரசு நூறு கோடி கொள்ளையடித்திருப்பதாக வீரப்பன் குற்றம் சாட்டியிருக்கிறார். நடுத்தர வர்க்கத்தினரை வரிச் சாட்டையால் வயிற்றிலடிக்கும் மத்திய அரசு, புலனாய்வுத் துறையினரின் துணையோடு இந்தக் கறுப்புப் பணங்களைக் கைப்பற்றினால் என்ன?

! நீர் மூழ்கிக் கப்பல்கள், பீரங்கிகள் என்று வெளிநாடுகளில் வாங்கும்போதுதானே நம்மால் முப்பது கோடி, அறுபது கோடி என்று கமிஷன் அடிக்க முடிகிறது! தமிழ்நாட்டிலோ சர்வசாதாரணமாகத் தொண்ணூறு கோடி, நூறு கோடி என்று அடித்திருக்கிறார்களே... என்று மத்திய அரசில் உள்ளவர்களே பிரமித்துப் போய்விட்டார்களோ என்னவோ!

* பி. ராஜசேகர், மதுரை — 14.

? ஆந்திர முதல்வர் என்.டி.ஆர். தம் கட்சியினருக்குத் தடி வைத்துக் கொள்ள ஆலோசனை கூறியிருக்கிறாரே?

! அதிலென்ன ஆச்சரியம்! எம். ஜி. ஆரின் தம்பிதானே அவர்.

* ஷேக்ராஜ், திருத்துறைப்பூண்டி.

? 'அரசியலில் எதையும் தாங்கும் இதயம் வேண்டும்' என்று அண்ணா சொன்னாரே! இன்றைய அரசியல்வாதிகளுக்கு அண்ணாவின் வார்த்தை எவ்வகையில் உதவுகிறது?

! அண்ணா சொன்னது அரசியல்வாதிகளுக்கல்ல; மக்களாகிய நமக்கேதான். ஏனெனில் இன்னும் என்னென்ன அரசியல் அசிங்கங்களை நமது இதயம் தாங்க வேண்டி வருமோ!

* வி. முரளி, சென்னை — 15.

? சுதந்திரப் போராட்ட உணர்வை மீண்டும் எழுப்புவதற்காக மீண்டும் 'தண்டி யாத்திரை' நடத்தப் போவதாக இ. காங்கிரஸ் அறிவித்துள்ளதே?

! மகாத்மாவின் தண்டி யாத்திரையை இப்படியெல்லாம் கேலிக்குள்ளாக்குவார்கள் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை. ரொம்ப அசிங்கம். அண்ணல் நடந்த பாதையில் கால் வைக்கக்கூட இவர்களுக்கு



* நாற்பது கோடி!



* எதையும் தாங்கு



* தடியான யோசனை



* என்ன செய்வது?



* அறுபது!

# இ. காங்கிரஸின் தண்டியாத்திரை பற்றி...?

அருகதை இல்லை!

* சுபா இராஜேஸ்வரன், குளத்தூர்.

? 'நான் ஓர் அனாதை. ஆட்சிக்கு வந்தால் யாருக்காகவும் சொத்து சேர்க்க வேண்டிய அவசியம் எனக்கு இல்லை'... என்று ஜெயலலிதா கூறியிருக்கிறாரே? அப்படியென்றால் தேர்தலில் நிற்கும் ஒவ்வொருவரும் சொத்துச் சேர்க்கவே நிற்கிறார்கள் என்பதுதான் உண்மையா?

! ஆரோக்கியமானதொரு ஜனநாயக நாட்டில் தேர்தலில் போட்டியிட விரும்பும் அரசியல்வாதிகள் தங்கள் கட்சியின் கொள்கைகளை மேடை போட்டுச் சொல்லுவார்கள்; அந்தக் கொள்கைகளாலும் திட்டங்களாலும் தேசம் பெறப் போகும் நன்மைகளை விளக்குவார்கள்; இதுவரையில் நடந்துள்ள தவறுகளைச் சுட்டிக் காட்டி அவற்றைத் தாங்கள் எப்படிச் சரிப்படுத்தப் போகிறார்கள் என்பதைச் சொல்லுவார்கள். இத்தனை காரணங்களுக்காகவும் தங்களை — தங்கள் கட்சியினரைத் தேர்ந்தெடுக்கும்படி மக்களைக் கேட்டுக் கொள்வார்கள். ஆனால் இங்கோ... சொல்லவே நாக்குக் கூசுகிறது சுவாமி!

* டேவிட் ஜான்பிரிட்டோ, திருத்துறைப் பூண்டி.

? ஓடும் பஸ்ஸில் மாணவிகளைக் கிண்டல் செய்த கல்லூரி மாணவர்கள் கைது செய்யப்பட்டது குறித்துத் தராசுவின் கருத்து என்ன?

! மாணவர்களாவது வெறும் கிண்டல்களோடு திருப்தியடைந்து வருகிறார்கள். ஆனால் முப்பது, நாற்பது வயதிற்கு மேற்பட்ட சில பெரியவர்கள் பஸ்ஸில் பயணம் செய்யும்போது, ஆண்கள் பக்கம் எத்தனைதான் இடமிருந்தாலும் அங்கே நிற்காமல், பெண்கள் பக்கமாகவே நின்று கொண்டு எருமை மாடு மாதிரி உராய்ந்து கொண்டு வருவதில் கில்லாடிகளாக இருக்கிறார்களே, அவர்களை யார் வந்து கைது செய்வது? அவர்களுக்கு என்ன தண்டனை?

* ராஜேந்தர் பிரியன், திருச்சி — 3.

? நெடுஞ்செழியனைச் சந்திக்க நேர்ந்தால் அவரிடம் என்ன கேட்பீர்கள்?

! 'இப்படிப்பட்டதோர் சகிப்புத் தன்மையை எங்கிருந்து ஐயா கற்றுக் கொண்டீர்கள்?' என்று வியந்து பாராட்டுவேன்!

* சி. என். ராஜேஷ், தங்கமாபுரிப்பட்டணம்.

? வரதட்சணைக் கொடுமையால் தூக்கில் தொங்கி உயிர் நீத்த சகோதரிகள் மூன்று பேரைப் பற்றிக் கேள்விப்பட்டீர்களா? மூவாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் எல்.ஐ.சி. அதிகாரியின் மகள்களுக்கே இந்தக் கதிதான் என்றால், இந்த அநியாயத்தை என்னவென்று சொல்லுவது?

! என்ன செய்வது? இந்த தேசத்தில் 'இராமர்களுக்கு இன்று ரத்தமில்லை!' (நன்றி: வைரமுத்து)

* பி. ராஜசேகர், மதுரை — 14.

? 'அத்தியாவசியப் பொருள்களின் விலை உயராமல் கண்காணிப்போம்' என பிரதமர் ராஜீவ் கூறியிருப்பது எந்த அளவில் நடைமுறைப்படுத்தப்படும்?

! பிரதமரின் கண்காணிப்பெல்லாம் முழு அளவில், போஃபோர்ஸ் மற்றும் தம் நண்பர்கள் சம்பந்தப்பட்ட ஊழல்கள் வெளிவராமலிருப்பதில்தான் இருக்கிறதே தவிர வேறு எதிலும் இல்லை.

* ஜெயந்தி ப்ரியன், திருத்துறைப்பூண்டி.

? சிகரெட் விலை உயராத பட்ஜெட் பற்றி?

! சிகரெட்டைப் பொறுத்தவரை, பட்ஜெட்டில் விலை ஏறுகிறதா இல்லையா என்பது பிரச்னையே அல்ல; விற்கும் வியாபாரிகள் ஆண்டுதோறும் நிர்ணயிக்கும் விலைதான் அதன் தலையெழுத்து. அப்பப்பா... பகல் கொள்ளையை விடவும் மோசமான கொள்ளை சிகரெட் விற்பவர்கள் அடிக்கும் கொள்ளை!

* பேப்பர் கார்த்திக், இராணிப்பேட்டை.*

? ஜெயில் சிங் மீண்டும் ஜனாதிபதியாக வர, நாற்பது கோடி வரை செலவு செய்யத் தயாராய் இருந்தவர்கள் பற்றி விசாரணை செய்யப்படுமென்று ராஜீவ் அறிவித்துள்ளாரே?

! அதில் பல விஷயங்கள் அடங்கியுள்ளன. 1. அந்த 'அவர்கள்' வி. பி. சிங் ஆட்களாகத்தான் இருக்குமென்று பிரதமர் பூரித்துப் போய் விசாரணை நடக்குமென்று அறிவித்தது. 2. பிரதமர் எதிர்பார்த்ததற்கு மாறாக விஷயம் போகவே இப்போது அவர் வழிந்து தவிப்பது... 3. தேசத்தின் எதிர்கால அரசியல் நலனை உத்தேசித்துக்கூட ஜெயில்சிங் அவர்களைப் பெயர் சொல்லிக் குறிப்பிடாமல் நழுவுவது... எல்லாமே வேதனைதான். பார்த்துக் கொண்டே இருங்கள். இவர்கள் ஒருநாள் நாட்டுக்கே விலை பேசினாலும் வியப்பதற்கில்லை!

* ரூ. 15 பரிசு பெறுபவர்:
பேப்பர் கார்த்திக், 18, ஏரிக்கரை தெரு, இராணிப்பேட்டை — 632 401 (வ.ஆ.)

# பிரபாகரனும் பின்பற்ற வேண்டும்

## வட்டமேஜை

* இன்றைய அரசியலில் யாருக்கும் வெட்கமில்லாத போது தமது கட்சியின் நிலை குறித்து வெட்கப்படும் அ.தி.மு.க. தொண்டரைப் பற்றி எண்ணும் போது, அத்தி பூத்ததைப் பார்த்த சந்தோஷம் ஏற்படுகிறது.

ஸ்ரீரங்கம், ஆர். கோபாலன்.

* நடிப்பை நிஜமாக்கிய லேவா ஸ்டேஜ் நாயகர் எஸ். வி. சகஸ்ரநாமம் பற்றி, இ. ராஜேந்திரன் எழுதியிருந்த செய்திகள் ஒரு பக்கமேயானாலும் அருமையாக இருந்தன.

செங்குன்றம், அ. ஜமால் மொய்தீன்.

* மக்களைக் காப்பாற்ற வேண்டுமென்ற கடமையுணர்வோடு தாமே வலியச் சென்று பிரிட்டிஷ் ராணுவத்திடம் சரணடைந்த வீர நாராயண சிங்கை, இலங்கையிலும் பிரபாகரன் பின்பற்ற வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்.

சென்னை — 33, எஸ். ராம்கோபால்.

* ஜெயமோகன் எழுதிய 'காப்பு' சிறுகதையில் புதுப் பெண்டாட்டியைக் கூட்டிக் கொண்டு, பம்பாயில் ஒதுங்குவதற்கு ஓர் இடம் தேடிக் கதிரேசன் அலைவது பரிதாபமாக இருந்தது. மனைவியுடன் குடித்தனம் நடத்த அவனுக்கு வசதியான இடம் சீக்கிரமே கிடைக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்.

சிறுமுகை, ஜி. கதிரேசன்.

* வாரா வாரம் தளபதி இடமதியின் பேச்சுக்களைப் படிக்கும் போது, வரும் தேர்தலில் அவர் போட்டியிட்டால் நிச்சயம் அவர் வெற்றி பெற்று ஆட்சியைப் பிடிப்பார் என்பது உறுதி...!

வலங்கைமான், வலங்கை ஜி. ராஜசேகர்.

* அ.தி.மு.க. வின் இரு அணியினர் பற்றிய ஒரு கேள்விக்குத் தராக அளித்த, 'சைத்தான்கள் வேதம் ஓதுகின்றன' என்ற பதில் சூப்பர். இதை விடப் பொருத்தமாக இவர்களைப் பற்றிச் சொல்ல இயலாது.

ராணிப்பேட்டை, பேப்பர் கார்த்திக்.

* 'காலடியில் சில கனவுப் பூக்கள்' சிறுகதையில் வரும் பாலாயி, செவத்தான் என்னும் ஏழைகளின் கற்பனை, கானல் நீரான சோகம் என் கண்களைக் கலங்க வைத்து விட்டது.

காரைக்குடி, கலைப்ரியன்.

* 'பதி இல்லாமல் சதி ஏது?' செய்தியில், செல்வி. ஜெயலலிதா எனக் குறிப்பிட்டிருந்தீர்கள். அனைவருமே அப்படித்தான் குறிப்பிடுகிறார்கள். எப்போது, அவர் 'உடன் கட்டை ஏற நினைத்தேன்!' என்று கூறினாரோ, அப்போதே அவர் செல்வி என அழைக்கப்படும் தகுதியை இழந்து விட்டார் என்பதை அனைவருமே கவனத்தில் கொள்ள வேண்டும்.

சென்னை — 15, வி. முரளி.

* பெருகி வரும் சாலை விபத்துக்களைத் தடுக்க ஜெர்மன் நாட்டுப் பேராசிரியர் கூறியிருந்த யோசனைகள் ஒவ்வொன்றும் அருமையானவை; அவற்றை நடைமுறைப்படுத்த அரசு அக்கறை காட்ட வேண்டும்; மக்களும் ஒத்துழைக்க வேண்டும். தக்க சமயத்தில் ஒரு முக்கியமான கட்டுரையை வெளியிட்டுள்ளீர்கள்.

கும்பகோணம், கே. பட்டு.

* தலையங்கம் படித்தேன். நீங்கள் கூறியபடி தபால் கார்டிலேயே எழுதுகிறேன். சிக்கனம் என்று மக்களுக்குக் கூறிவிட்டு மக்கள் செலவில் லட்சத் தீவில் விடுமுறைப் பயணம்! இப்படிப்பட்ட பிரதமர் காலத்தில் நாம் பாதயாத்திரைதான் போக வேண்டும். வேறு வழி?

ஈரோடு — 1, ரவிரமணு.

* கோபத்தோடு கொந்தளித்தெழுதுதல் மட்டுமல்ல; கிண்டலோடு சதாய்க்கவும் தெரியும் என்பதைத் தெளிவுபடுத்தியது சென்ற வாரத் தலையங்கம். பாராட்டுக்கள்!

திருச்சி — 8, ஆர். மின்னல் ராஜன்.

* அட்டைப்படச் சிறுமியின் விரக்தி முகம், மனம் கலங்கச் செய்து விட்டது.

கோவை, உமார்த்தி.

* அற்புதமான கவர் ஸ்டோரியைத் தந்திருக்கிறார் வாஸந்தி. பலவகையான தொழிற் கூடங்களில் அந்த கைய சிறுவர்களைப் பார்க்கும் போது நம்மில் பெரும்பாலோருக்கு உண்டாகாத எண்ணம், ஃபாதர் ஜோ அரிம்பூர் அவர்களுக்கு உண்டாகி, அவர் அரும்பணியாற்றி வருவது நெஞ்சை நிறைக்கிறது!

செங்கவல்லி, பூங்குழலி.

* 'கொடுமைக்குள்ளாகும் அடிமைக் குழந்தைகள்' கவர் ஸ்டோரி என் நெஞ்சை நெகிழச் செய்தது. எல்லோரும் இந்நாட்டு மன்னர் என்ற வாசகம், ஏழைகளை ஏமாற்றுவதற்காகவே கூறப்பட்ட வெறும் மேடைப் பேச்சு என்பது தெளிவாகப் புரிந்தது!

விருதுநகர், கே. டி. ஆர். சேகர்.

* 'கொடுமைக்குள்ளாகும் அடிமைக் குழந்தைகள்' கட்டுரையைப் படித்து அளவில்லா வருத்தம் கொண்டேன். என் உடன்பிறவாச் சகோதர சகோதரிகளின் துயரம் என்று நீங்குமோ, அன்று தான் நாம் வாழும் இந்த நாடு முன்னேறியதாகக் கூற முடியும்.

மேட்டுப்பாளையம், சிவகுரு.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: இ. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
அரை மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

Registered No. M. 4392

Registered as a Newspaper in Sri Lanka

# இயற்கையான சந்தனத் தைலத்தின் செழுமை

மைசூர் சாண்டல் சோப்பில் பரிமளிக்கிறது

## மைசூர் சாண்டல் சோப்

– ஒரு மோகன ஸ்பரிசம்




MCA/MSS/85-Tam

தயாரிப்பவர்கள் : கர்நாடக சோப்ஸ் அண்ட் டிட்டர்ஜெண்ட்ஸ் லிமிடெட்

விற்பனையாளர்கள் : மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிமிடெட்